# கல்வெட்டு

திருவள்ளுவராண்டு 2025 (பவ ஆண்டு) பங்குனித் திங்கள்



பிடாரி படிமம் - பாடி
14-ஆம் நூற்றாண்டு.

காலாண்டிதழ் - 42 ( 1995, ஏப்ரல் திங்கள் ) விலை ரூ. 1-50
தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறை

உள்ளே . . . .

# பாண்டிய நாட்டு நடுகற்களும் பிற நடுகற்களும்

**திரு. தீ. சுப்பிரமணியன்**

காப்பாட்சியர், தருமபுரி

தமிழகத்தின் வடபகுதியில் அதிக அளவில் நடுகற்கள் எடுக்கப்பட்டுள்ளன. பாண்டிய நாட்டு நடுகற்களுக்கும் பிற நடுகற்களுக்கும் இடையே உள்ள அமைப்பு முறைகள் பற்றியும், பாண்டிய நாட்டில் நடுகற்கள் குறைவாகக் கிடைப்பதற்கான காரணங்கள் பற்றியும் இக்கட்டுரையில் காண்போம்.

கொங்குநாடு, தருமபுரி, வடஆர்க்காடு ஆகிய பகுதிகளில் நடுகற்கள் அதிக அளவில் காணப்படுகின்றன. கி.பி. 5-ஆம் நூற்றாண்டிலிருந்து கி. பி. 18-ஆம் நூற்றாண்டு வரையில் தொடர்ந்து நடுகற்கள் இப்பகுதியில் கிடைக்கின்றன. தொறு கவர்தல், தொறு மீட்டல், ஊர்ப்பூசல், புலிகுத்திப்பட்டான், பன்றி குத்திப்பட்டான் போன்றவைகளும் மர்ற்றரசர்களுடன் போர் செய்து உயர்ந்த வீரர்களுக்கும் இந்நடுகற்கள் எடுக்கப்பட்டுள்ளன. இவற்றில் தொறு கவர்தல். தொறு மீட்டல் ஆகியவற்றால் உயிர் நீத்தவர்களின் நடுகற்கள் அதிகம்[1]. பெரும்பாலான நடுகற்களில் கல்வெட்டுகள் உள்ளன. காலத்தால் முற்பட்ட நடுகற்களில் உள்ள வீரர்களின் உருவங்கள் அளவில் சிறியனவாகவும் புடைச் சிற்பங்கள் அதிகம் வெளியில் வராமலும் செதுக்கப்பட்டுள்ளன. சில நடுகற்கள் வரிவடிவத்தில் காணப்படுகின்றன. வீரனின் உருவங்களுடன் புனிதச் சின்னங்களாகக் கெண்டி, கண்ணாடி போன்றவை செதுக்கப்பட்டுள்ளன. பிற்காலத்தில் எடுக்கப் பட்ட நடுகற்களில் உள்ள புடைச் சிற்பங்கள் பெரியதாகவும், சண்டைக் காட்சிகளுடனும் காணப்படுகின்றன. விஜயநகர மன்னர்களின் காலத்தில் பெரிய பலகைக் கல்லில் வீரர்களின் உருவங்கள் வடிக்கப்பட்டுள்ளன. தருமபுரிப் பகுதியில் நடுகற் களை வேடியப்பன் என்ற பெயரில் இன்றும் வழிபடுகின்றனர்.

பாண்டிய நாட்டில் மிகக் குறைந்த எண்ணிக்கையில் நடுகற்கள் கிடைக்கின்றன. இப்பகுதியில் கிடைக்கின்ற நடுகற்களில் காலத்தால் முற்பட்டவை கி.பி. 8, 9-ஆம் நூற்றாண்டைச் சார்ந்தவையாகும். இதற்குப்பின் நடுகற்கள் கிடைக்கவில்லை. மீண்டும் கி. பி. 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த சில நடுகற்கள் கிடைக்கின்றன. மேற்கண்ட நடுகற்களில் நிரைகவர்தலின் பொருட்டு உயிர் நீத்த வீரனுக்கு எடுக்கப்பட்ட நடுகல் ஒன்று கரிசல்குளம் என்ற இடத்தில் கிடைத்துள்ளது.[2] நடுகல்லில் உள்ள வீரனின் கையில் வாள் காணப்படுகின்றது. வீரனின் அருகில் கல்வெட்டு ஒன்றும் உள்ளது. இக்கல்வெட்டு ''காலி நிரை போகவும் ஊரும் அழியாமல் பட்டான்'' என்று கூறுகின்றது.

கி. பி. 8-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த பாண்டியநாட்டு வீரர்களுக்கு எடுக்கப்பட்ட இரண்டு நடுகற்கள் பத்மநாதபுரம் அரண்மனை அருங்காட்சியகத்தில் உள்ளன.[3] இதிலுள்ள வட்டெழுத்துக் கல்வெட்டிலிருந்து இந்த நடுகல் எடுக்கப்பட்ட விவரம் தெரியவருகின்றது. இதில் 'செஞ்சோற்றுப் பெருங்கடன்' தீர்த்த வீரனைப் பற்றிய குறிப்பு உள்ளது. வீரன் வாளுடன் காட்டப்பட்டுள்ளான். மாற்றரசர்களுடன் போர் செய்து உயிர் நீந்த வீரர்களுக்கு எடுக்கப்பட்டவை இந்நடுகற்கள். இதே காலத்தைச் சார்ந்த நடுகல் ஒன்று கழுகுமலையில் கிடைத்துள்ளது. இவற்றுடன் மானூர், எதிர்கோட்டை, சித்தர்கள் நத்தம், சிங்கம்பட்டி ஆகிய ஊர்களிலும் நடுகற்கள் கிடைக்கின்றன.

கி. பி. 16-ஆம் நூற்றாண்டைச் சார்ந்த ஒன்பது நடுகற்கள் கோவில்பட்டி வட்டம் இளவேளங்கால் என்னுமிடத்தில் கிடைத்துள்ளன. இப்பகுதியிலிருந்து சிற்றரசர்களான திருநெல்வேலிப் பெருமாள் வெங்காளராசா ஆகிய இருவருக்கும் இடையே நடைபெற்ற போரில் உயிர்நீத்தவர்களுக்கு இந்நடுகற்கள் எடுக்கப்பட்டுள்ளன. திருநெல்வேலிப்பெருமாளுக்கு உதவியாகப் போர் செய்த குண்டையன்கோட்டை வீரர்கள் எதிரிகளின் குதிரைகளைக் குத்தி உயிர்நீத்த காரணத்தால் இந்த வீரர்களைக் குதிரைகுத்திப் பட்டான் என்று கல்வெட்டு கூறுகின்றது. இக்கல்வெட்டு கி.பி. 1547-ஆம் ஆண்டைச் சார்ந்தது.[4] வீரர்கள் போர் செய்யும்

காட்சி இந்த நடுகற்களில் புடைச் சிற்பங்களாக வடிக்கப் பட்டுள்ளன.

மேற்கூறிய நடுகற்களுடன் சேர்ந்த பாண்டிய நாட்டில், சுமார் 20 நடுகற்கள் இதுகாறும் கிடைத்துள்ளன. இவற்றில் பெரும்பாலான நடுகற்கள் அரசனுக்காகப் போர் செய்து உயிர் நீத்தவர்களுக்கு எடுக்கப்பட்டுள்ளன. என்பது குறிப்பிடத்தக்க தாகும். மற்ற பகுதிகளைவிட அதிக பரப்பளவைக் கொண்ட பாண்டிய நாட்டில் நடுகற்கள் குறைந்துள்ளது கேள்விக்குறியாக உள்ளது. நடுகற்கள் அதிகம் காணப்படுகிற பகுதியின் சமூகச் சூழலையும், பாண்டிய நாட்டுப் பகுதியின் சமூகச்சூழலையும் ஒப்பிட்டுப் பார்த்தால் இதன் விபரம் தெளிவாகும்.

தருமபுரி மாவட்டம், வடஆர்க்காடு ஆகிய பகுதிகளில் அதிக அளவில் நடுகற்கள் கிடைக்கின்றன. இந்த நடுகற்களைப் பற்றியும் அரிய நடுகற்களை எடுத்த மக்களின் சமுதாயத்தையும் அவர்களுடைய மூதாதையர்களையும் பற்றிய ஆய்வு மிகவும் அத்தியாவசியமான ஒன்றாகும். அதாவது சுமார் 2000 ஆண்டு களுக்கு முற்பட்ட பெருங்கற்கால மக்களின் சமூக சூழ்நிலை, வாழ்க்கை முறை ஆகியன இதற்கு முக்கியமான கருதுகோள்களாக எடுத்துக்கொள்ளலாம். தருமபுரிப் பகுதியில் கல்வட்டங்கள் கற்பதுக்கைகள், குத்துக்கற்கள், தாழி போன்ற வகைகலளைச் சார்ந்த பெருங்கற்கால ஈமச்சின்னங்கள் கிடைக்கின்றன. இந்த ஈமச்சின்ன வகைகளில் 90 சதவிகிதம் கல்வட்ட வகையைச் சார்ந்தவை.[5] கல்வட்டங்கள் வகையைச் சார்ந்த ஈமச்சின்னங்கள் கிடைக்கின்ற பெரும்பாலான இடங்களில் நடுகற்கள் கிடைக் கின்றன. கல்வட்டங்களைச் சுற்றி சுமார் 5 கி.மீ. சுற்றளவில் நடுகற்கள் காணப்படுகின்றன. கல்வட்டங்களும், நடுகற்களும் இணைந்து காணப்படுகின்ற காரணத்தால் கல்வட்ட வகையை ஈமச்சின்னமாகக் கொண்ட மக்களும் நடுகல் எடுக்கும் வழக்கத்தைக் கொண்ட மக்களும் ஒரே சமூகப்பிரிவைச் சார்ந்தவர்களாக இருந்திருக்க வேண்டும் என்று உய்த்துணர முடிகின்றது.

இதற்கு ஆதாரமாக தருமபுரி அருகிலுள்ள சென்னை சந்திரத்திலுள்ள நடுகற்களைக் கூறலாம். இங்குள்ள 5 நடுகற் களில் நான்கு நடுகற்கள் கல்வட்ட ஈமச்சின்னங்களுக்கு அருகிலும்

ஒன்று கல்வட்டத்தின் உட்பகுதியிலும் காணப்படுகின்றன. இதை இன்றும் காணலாம்.[6] இதிலிருந்து கல்வட்ட ஈமச்சின்னங்களைக் கொண்ட சமுதாயப் பிரிவினர் வாழ்ந்த இடங்களில் நடுகற்கள் எடுக்கும் வழக்கம் இருந்துள்ளது என்பதை அறியமுடிகின்றது. எனவே கல்வட்ட வகையைச் சார்ந்த பிரிவினர் வளர்ச்சி அடைந்த நிலையில் நடுகற்களை எடுக்கும் வழக்கத்தைக் கொண்டிருக்க வேண்டும். கல்வட்ட ஈமச் சின்னம் கி.மு. 300க்கும் கி.பி. 300க்கும் இடைப்பட்டதென்று அகழாய்வுகள் கூறுகின்றன.[7] நடுகற்கள் கி.பி. 5ஆம் நூற்றாண்டிலிருந்து கிடைக்கின்றன. எனவே கல்வட்ட ஈமச்சின்னத்தைப் பழக்கமாகக் கொண்ட மக்கள் நடுகற்களின் மூதாதையர்கள் என்று கூறலாம். கல்வட்ட வகை ஈமச்சின்னங்கள் எடுக்கும் முறை நின்ற பின் நடுகல் அதன் தொடர்ச்சியாக எடுக்கப்பட்டிருக்கலாம்.

இந்தக் கோட்பாட்டை மனதில்கொண்டு பாண்டிய நாட்டுப் பெருங்கற்காலச் சின்னங்களைப் பார்ப்போம். பாண்டிய நாட்டிலும் கல்வட்டங்கள், கற்பதுக்கைகள். தாழி போன்ற வகையைச் சார்ந்த ஈமச்சின்னங்கள் கிடைக்கின்றன. எனினும் மற்ற வகையைச் சார்ந்த ஈமச்சின்னங்களைவிடத் தாழி வகையைச் சார்ந்த ஈமச் சின்னங்கள்தான் பாண்டிய நாட்டில் அதிக அளவில் கிடைக்கின்றன.[8] இதுவரை வெளியிடப்பட்டுள்ள ஈமச்சின்னங்களில் 90 சதவிகிதம் தாழி வகையைச் சார்ந்தவை என்று தொல்லியல் ஆய்வாளர்கள் கூறுகின்றனர்.[9] எனவே தாழியை ஈமச்சின்னமாகக் கொண்ட சமூகப்பிரிவினர் நடுகல் எடுக்கும் வழக்கம் இல்லாதவர்களாக இருந்திருக்கவேண்டும். ஆகையால் பாண்டிய நாட்டில் நடுகற்கள் அதிகம் கிடைக்கவில்லை.

தருமபுரியிலும் தாழி வகை ஈமச்சின்னங்கள் மிகவும் குறைந்து காணப்படுகின்றன. சேலம் மாவட்டத்திலும் நடுகற்களும் கல்வட்டங்களும் தருமபுரியைவிடக் குறைந்துள்ளது. இதைத்தொடர்ந்து தெற்கில் செல்லச்செல்ல நடுகல், கல்வட்டம் குறைந்தும் தாழிவகை ஈமச்சின்னம் அதிகரித்துக்கொண்டும் செல்கின்றது.

நடுகற்கள் அதிகம் கிடைக்கின்ற பகுதிகளில் குறிஞ்சி, முல்லை ஆகிய நிலங்கள் காணப்படுகின்றன. இப்பகுதியில் வாழ்ந்த இனக்குழு மக்கள் மலையரண்களுக்கு இடைப்பட்ட பகுதியில் வாழ்ந்துள்ளனர்.[10] இத்தகைய குழுக்கள் பிறிதொரு குழுவைச் சார்ந்த

கால்நடைகளைக் கவர்ந்து சென்றதிலும், அதைமீட்டதிலும் ஏற்பட்ட பூசல்களில் உயிர்நீத்த வீரர்களுக்கு நடுகல் எடுத்தனர். ஆனால் பாண்டிய நாட்டில் இந்த காலகட்டத்தில் நிலையான ஆட்சி ஏற்பட்டுவிட்டது. பாண்டியமன்னர்களும் சோழ மன்னர்களும் வலுவான ஆட்சியை நிறுவினர். எனவே இங்கு அத்தகைய பூசல்கள் ஏற்பட்ட வாய்ப்புகள் இல்லாமல் போய்விட்டன.

மேலும் பாண்டிய நாட்டில் ஆற்றுநீர்ப் பாசனமும், விரிவு படுத்தப்பட்டு விவசாயம் வளர்ச்சியடைந்தது. கி. பி. 7,8-ஆம் நூற்றாண்டுகளில் விவசாயம் முக்கியமான தொழிலாக இருந்தது என்பதைக் கல்வெட்டுகள் கூறுகின்றன.[11] எனவே கால்நடைகள் இந்தப் பகுதியில் இரண்டாவது இடத்தையே பெற்றது. ஆகவே நிரைகவர்தல், மீட்டல் போன்ற பூசல்கள் ஏற்படச் சூழ்நிலைகள் ஏதுவாக அமையவில்லை.

சங்க இலக்கியங்கள் வளர்த்த பாண்டிய நாட்டுப் பகுதியில் சங்க இலக்கியங்கள் கூறும் நடுகற்கள் இல்லாமல் போய்விட்டது. தாழியை ஈமச்சின்னமாகக் கொண்ட சமூகப் பிரிவினர்களிடையில் நடுகல் எடுக்கும் வழக்கம் இல்லாததாலும், நிலையான அரசு தோன்றியதினாலும், விவசாயம் முதன்மையான தொழிலாக மாறியதாலும் இப்பகுதியில் நடுகற்கள் கிடைக்கவில்லை எனலாம். இது முடிவான முடிவல்ல.

---

1. K. Rajan & T. Subramanian 'Hero Stones in Tamiinadu', Trivedi's Felicitation Vol., Bhopal.
2. சொ. சாந்தலிங்கம், பாண்டிய நாட்டில் புதிய கல்வெட்டுக்கள் தமிழ்க் கல்வெட்டுகளில் செய்தனவும் செய்ய வேண்டுவனவும்' தஞ்சாவூர்.
3. Dr. K. V. Raman 'Some Hero Stones in the Pandyan country, Seminar on Hero Stones, State Dept. of Archaelogy, Madras 1974.
4. மேலது.
5. K. Rajan & T. Subramanian opcit.
6. பெருங்கற்காலச் சின்னங்களைக் கள ஆய்வு செய்ய உதவியவர் டாக்டர். கா. ராஜன் கல்வெட்டியல் துறை, தமிழ்ப் பல்கலைக் கழகம், தஞ்சாவூர்.

7. P. R. Srinivasan 'Beginnings of the Tradition of South Indian Architecture, Madras 1976.
8. K. S. Ramachandran A bibliography on Indian magaliths State Dept. of Archaeology Madras pp. 64-66.
9. Dr. S. Gurumurthy Ceramic Tradition in South India, University of Madras 1981 - pp. 194 - 200.
10. தி. சுப்பிரமணியன், தகடூர் நாட்டுப் பிரிவுகள், தகடூர் வரலரற்றுக் கருத்தரங்கம், தருமபுரியில் வாசித்த கட்டுரை.
11. வெ. வேதாசலம் 'பாண்டிய நாட்டில் நீர்ப்பாசனப் பணிகள், கல்வெட்டிதழ், தொல்பொருள் ஆய்வுத்துறை, சென்னை.



# வருச நாட்டுப் பகுதியில் வரலாற்று ஆய்வுகள்

**நா. சுலைமான்**

அரசு அருங்காட்சியகம், மதுரை

மதுரை மாவட்டம், ஆண்டிப்பட்டி வட்டத்தில் வறட்சி மிகுந்த பகுதியாக விளங்கி வருகின்றது வருச நாட்டுப் பகுதி. ஆனால் இப்பகுதி வரலாற்றில் வளமையான பகுதியாக விளங்கி உள்ளதை அண்மைக்காலக் களஆய்வுகளில் கண்டறியப்பட்ட செய்திகள்[1] உணர்த்துகின்றன. வைகையாற்றின் தொடக்கப்பகுதியாக விளங்கும் இப்பகுதி இங்கு கிடைத்த கல்வெட்டுகளில் 'வரிசை நாடு' என்று குறிப்பிடப்படுகின்றது. வரிசைநாடே தற்போது வருசநாடாக மாறி வழங்குகின்றது. இந்நாட்டில் பெருங்கற்காலத்தினைச் சார்ந்த முதுமக்கள் தாழிகளும், பிற்காலப் பாண்டியர் கோயில்களும் கல்வெட்டுகளும் நாயக்கர் காலத்தினைச் சார்ந்த நினைவுத் தூண்களும் கண்டறியப்பட்டுள்ளன.

## பெருங்கற்சின்னங்கள்

வருசநாட்டுப் பகுதியில் ஆய்வுசெய்த போது தும்மக்குண்டு என்ற ஊரில் பெருங்கற்காலத்தினைச் சார்ந்த முதுமக்கள் தாழிகள் கண்டறியப்பட்டுள்ளன. இக்கிராமத்தில் வைகையாற்றினை ஒட்டிய பகுதியில் இவை காணப்படுகின்றன. இவை ஈராயிரம் ஆண்டுகளுக்கு முற்பட்டவையாகும். சங்க காலத்தினைச் சார்ந்தவையாகும். இதனை இத்தாழியில் கிடைத்த கருப்பு சிவப்பு மட்கலன்கள் உறுதிப்படுத்துகின்றன. இம்மட்கலன்களோடு இரும்பால் செய்த கருவிகளும் கிடைத்துள்ளன. செதுக்கும் கோடரி, ஈட்டி, வாள் போன்றவை இவற்றில் அடங்கும். இவற்றோடு எலும்புத் துண்டுகளும் தாழியில் கிடைத்துள்ளன.

மயிலாடும் பாறையினை ஒட்டிய நரசிங்கபுரத்தில் கோட்டை இருந்து அழிந்தமைக்கான சான்றுகள் கிடைக்கின்றன. இவற்றினை ஒட்டிய பகுதியில் முதுமக்கள் தாழிகள் மண் அரிப்பினால் வெளிப்புறத்தில் தெரிகின்றன.

## மயிலாடும்பாறை

இவ்வூரில் பிற்காலப் பாண்டியர் காலத்தில் கி. பி. 13ஆம் நூற்றாண்டில் எடுக்கப்பட்ட கல்லாலான சிவன் கோயில் ஒன்று உள்ளது. கருவறை, அர்த்தமண்டபம் கொண்டதாக இது விளங்கு கின்றது. இவற்றின் மேற்புறம் அழிந்த நிலையில் காணப்படு கின்றது. இது தற்போது பால்வண்ணநாதர் கோயில் என்று அழைக்கப்படுகின்றது. இக்கோயிலின் கருவறை, அர்த்தமண்டபம் ஆகியவற்றில் பிற்காலப் பாண்டிய மன்னர்களான குலசேகர பாண்டியன், பராக்கிரம பாண்டியன் ஆகியோரது கல்வெட்டுகள் காணப்படுகின்றன. இவை தவிர மன்னர் பெயர் தெரியாத இக் காலத்தினைச் சார்ந்த துண்டுக்கல்வெட்டுகளும் இக்கோயிலில் உள்ளன. முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியனின் மூன்றாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் பராக்கிரம பாண்டியனின் பதினேழாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டும் இங்குள்ளன.

இங்குள்ள கல்வெட்டுகளில் இவ்வூர் 'ஒரோமில்' என்று குறிப்பிடப்படுகின்றது. இவ்வூரே தற்போது 'மயிலாடும்பாறை' என்று வேறு பெயரில் வழங்கப்படுகின்றது. 'பாண்டி மண்டலத்து வரிசைநாட்டு ஒரோமில்' என்று கல்வெட்டில் இது குறிப்பிடப்படு கின்றது. இங்குள்ள சிவன்கோயில் ஒரோமில் ஈஸ்வரம் உடையார் கோயில் என்று பெயர் பெற்று விளங்கியுள்ளது. இக்கோயிலை, இப்பகுதியில் முதல் மாறவர்மன் குலசேகரபாண்டியனின் (கி. பி. 1268-1311) அதிகாரியாகவும் சிற்றரசனாகவும் விளங்கிய தொண்டைமானாரின் தேவியார் எடுப்பித்துள்ளாள். இவளே இக்கோயிலில் இருந்த உமையம்மைக்கு மார்பில் அணியும், பொன் நகையும், (திருமுலைத்தடம்) சவடி, பாணங்கள் போன்ற பொன் நகைகளும் கொடையாக அளித்துள்ளாள்.

தொண்டைமானாரின் பணிப்பெண்ணாக விளங்கிய அணுக்கி களில் ஒருத்தி புன்னன் அழகியநாச்சி என்பவள் இக்கோயில் இறைவனுக்கு நந்தாவிளக்கு ஒன்றும், நிலைவிளக்கு இரண்டும் அளித்துள்ளாள் என்று குலசேகரபாண்டியனின் கல்வெட்டு தெரிவிக் கின்றது. இதற்காக எருமை எட்டினை இவள் அளித்திருக்கின்றாள். இதைத்தவிர மற்ற துண்டுக் கல்வெட்டுகள் இக்கோயிலுக்கு விளக்கிற்காக ஐம்பது ஆடுகளும் தயிரமுது போன்ற திருவமுதிற்

காகக் கொடைகளும் அளித்துள்ளதைத் தெரிவிக்கின்றன. இச்சிவன் கோயிலைத் தவிர மற்றொரு பழமையான கோயிலும் இவ்வூரில் உள்ளது.

## நினைவுத் தூண்

மயிலாடும்பாறையிலிருந்து வருசநாட்டிற்குச் செல்லும் வழியிலுள்ள செங்குளத்தில் கோயில் பண்ணை என்னும் இடத்தில் நாயக்கர் காலத்தினைச் சார்ந்த இரண்டு நினைவுத் தூண்கள் உள்ளன. இவற்றில் இறந்துபட்ட வீரர்களின் வாழ்க்கை முழுவதும் தொடராகப் பல அடுக்குகளாகச் சிற்பமாக வடிக்கப்பட்டுள்ளன. இவ்வகையில் இவை பாண்டிநாட்டில் கிடைத்த நினைவுத் தூண்களில் குறிப்பிடத்தக்கதாக உள்ளன.

இவ்வாறு இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்பிருந்து நாயக்கர் காலம் முடியத் தொடர்ச்சியான வரலாற்றைப் பெற்று வருசநாட்டுப் பகுதிகள் விளங்கியுள்ளன என்பதை மேற்கண்ட அண்மைக் கால ஆய்வுகள்[2] உணர்த்துகின்றன.

---

1. மா. சந்திரமூர்த்தி - வருச நாட்டுப் பகுதியில் வரலாற்றுத் தடயங்கள், கல்வெடடு. இதழ் 19, பக்.4.
2. மேற்கண்ட கள ஆய்வுகள் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறைக் காப்பாட்சியர் வெ. வேதாசலம் அவர்களுடன் சேர்ந்து மேற்கொள்ளப்பட்டன.



# பாண்டிய நாட்டில் இசுலாமியர்

**டாக்டர். எஸ். எம். கமால்**

இராமநாதபுரம்

பாண்டியநாடு பழம் பெரும் நாடு. இங்கு தமிழ்மொழி தனிச்சிறப்புப் பெற்று இருந்தது போலச் சமயநிலையிலும் இந்த நாடு செழுமை பெற்றுத் திகழ்ந்தது. ஆரியம், சமணம், பௌத்தம் சைவம், வைணவம், இசுலாம், கிறித்துவம் என்ற பல்வேறு ஆன்மீக நெறிகள் இங்கே தழைத்து வளர்ந்து வந்துள்ளன இவற்றுள், இந்த நாட்டு இசுலாமியரது வரலாற்றுத் தொன்மையைத் தெரிவிக்க முற்படுவது இந்தக் கட்டுரை.

ஆறாம் நூற்றாண்டு வரை ஆண்டான் அடிமை, பல தெய்வ வழிபாடு, பாரம்பரிய ஆணவம் பெண் இழிவு, மதுமயக்கம் ஆகிய அவலங்களில் அழுந்திக் கிடந்த அரபுத் தாயகத்தில், இசுலாம் என்ற புத்தொளி பரவியது. அரபு வணிகர்கள் அவர்கள் சென்ற கீழை நாடுகளுக்கெல்லாம் இந்தப் புதிய சமயத்தையும் ஏந்திச் சென்றனர். பொன்னொடு வந்த அவர்களது பெருநாவாய்கள் பாண்டிய நாட்டுக் கடல் துறைகளைத் தொட்டுத் தொடர்ந்தன. அங்கெல்லாம் மலைபடு அகிலும், அலைபடு முத்தும், துலைபடு மிளகும் அவர்கள் அள்ளிச்சென்றவையாகும். இந்த வாணிபப் பெருக்கின் காரணமாகக் காயல்பத்தன் (பெரிய பட்டினம்), மாலிபத்தன் (தேவிபட்டினம்) போன்ற கடல் துறைகளில் அவர்கள் குடியேறி நிலையாகத் தங்கினர்.

இந்தக் குடியேற்றங்கள் "அஞ்சுவண்ணம்" என அழைக்கப் பட்டன. பாண்டிய நாட்டுச் சமுதாய அமைப்பு ஏற்கனவே பிராமண, வைசிய, சத்திரிய, சூத்திரர் என்ற நான்கு வகை வருணத்தவரைக் கொண்டு இருந்ததால், இந்த இசுலாமிய வணிகர்கள் அஞ்சாவது வருணத்தினராக வழங்கப்பட்டனர். இராமநாதபுரம் மாவட்டம் தீர்த்தாண்டதான கல்வெட்டு தொண்டிப் பகுதியில் அஞ்சு வண்ணம் அமைந்திருந்ததைக் குறிப்பிடுகிறது.[1] இத்தகைய குடியேற்றம் ஒன்று குமரி

மாவட்டத்தில் இன்றும் அஞ்சு வண்ணம் என்ற பெயரிலேயே இருந்து வருவது இங்கு குறிப்பிடத் தக்கது. இங்கு அஞ்சு வண்ணத்து இசுலாமியர்களைப் பிற்கால இலக்கியங்களும் கல்வெட்டுகளும், பாண்டியரது மெய்க்கீர்த்திகளும் "சோனகர்" ஆகவும், "துருக்கர்" ஆகவும் இனங்காட்டி உள்ளன. இந்தக் குடியேற்றங்கள் ஏற்பட்ட காலவரையைச் சொல்லுவதற்கான உறுதியான ஆதாரங்கள் இது வரை கிடைக்கவில்லை.

கிடைத்துள்ள செய்திகளின் வழி இவை ஒன்பதாவது நூற்றாண்டில் ஏற்பட்டு இருக்க வேண்டும் என்ற ஊகத்தை உறுதி செய்கின்றன. அரிமர்த்தன பாண்டியனது அமைச்சரான மாணிக்கவாசகப்பெருமான் அரபுக் குதிரைகளை வாங்குவதற்குத் திருப்பெருந்துறை சென்ற வரலாறு கிழக்குக் கடற்கரையில் இசுலாமியரது நடமாட்டத்தை மறைமுகமாகக் குறிப்பிடுவது ஆகும்.[2] கிழக்கிந்தியக் கம்பெனியாரது ஆட்சித் தொடக்கத்தில் விதிக்கப்பட்ட தீர்வையை எதிர்த்து நீதிபதி ஸ்ராட்டனிடம் காயல்பட்டினம் லெப்பைகள் தாக்கல் செய்த ஆவணங்களிலிருந்து அவர்கள் ஆயிரம் ஆண்டுகளுக்கு முன்னர் அரபு நாட்டிலிருந்து அங்கு குடியேறியது தெரிய வருகிறது.[3]

மதுரை கோரிப்பாளையம் கல்வெட்டு[4] மதுரையிலும் ஓர் அஞ்சு வண்ணம் இருந்த செய்தியைத் தெரிவிக்கிறது. அப்பொழுது இருந்த மன்னன் கூன் பாண்டியனிடம் அரபு வணிகர்கள் பதினான்காயிரம் பொன் கொடுத்துக் கோரிப்பாளையம், பீவிகுளம், சொரிகுடி, கண்ணாரேம்பல், சிறுதார், திருப்பாலை ஆகிய ஆறு ஊர்களை வாங்கியதை இந்தக் கல்வெட்டு தெரிவிக்கின்றது.

இன்னொரு செய்தி, மதுரை அரசு கட்டிலுக்குப் போட்டியிட்ட பராக்கிரம பாண்டியன், குலசேகர பாண்டியன் என்ற இரு இளவல்களில் பராக்கிரமனது உதவிக்காக இலங்கையிலிருந்து கி.பி. 1170-இல் புறப்பட்டு வந்த பெரும்படையின் தண்ட நாயகனைத் தொண்டிக்கு அருகில் சோனகர்கள் எதிரேற்று அன்பளிப்புகளை வழங்கியதாக வரலாற்று ஆசிரியர் எஸ். கிருஷ்ணசாமி அய்யங்கார் அவர்கள் வரைந்துள்ளார்.[5]

இந்தக் கால கட்டத்தில் மதீனத்தில் இருந்து பாண்டிய நாடு வந்த சுல்தான் சையது இபுறாகீம் என்ற புனிதர் விக்கிரம பாண்டியனை வென்று இராமநாதபுரம் பகுதியில் பன்னிரண்டு ஆண்டு காலம் ஆட்சி நடத்தியதாக மதுரை நாட்டு வரலாற்றிலும்,[6] தீன் நெறி விளக்கம்[7] என்ற இலக்கியத்திலும் குறிப்பிடப் பட்டுள்ளது. திருப்புல்லாணி திருக்கோயிலில் உள்ள கல்வெட்டு[8] இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி.பி. 1246-ஆம் ஆண்டில் பவுத்திர மாணிக்கப் பட்டினத்தில் சோனகரது சாமந்த பள்ளிவாசல் ஒன்று இருந்ததைக் குறிப்பிடுவதிலிருந்தும் கி. பி. 1293-இல் தமிழகம் வந்த உலகப்பயணி மார்க்கோ போலோ பாண்டிய நாட்டில் உள்ளவர்கள் விலங்கு, பறவை ஆகியவைகளின் இறைச்சியை உண்ணுவதற்கு அவைகளைக் கொல்லுவதில்லை என்றும் இசுலாமியர் மூலம் பெற்று உண்ணு கின்றனர் என்றும் வரைந்திருப்பதில்[9] இருந்தும் இசுலாமியரது குடியேற்றங்கள் பாண்டிய நாட்டில் பரவலாக அமைந்திருந்த விவரம் பெறப்படுகிறது. மற்றும் கி. பி. 1333-இல் பாண்டிய நாட்டுக்கு வருகை தந்த மற்றொரு பயணியான இபுனுபதூ தாவின் குறிப்புகள்[10] பத்தன் (பெரிய பட்டினம்) நகரில் இருந்த இசுலாமியரையும் இசுலாமியத் துறவி ஒருவரையும் குறிப்பிடு வதிலிருந்து மன்னார் வளைகுடாப் பகுதியை ஒட்டிய கடற் கரையில் இசுலாமியர் குடியேற்றங்கள் இருந்ததை உறுதிப்படுத்து கின்றன.

இந்த வணிகர்கள் தங்கள் பொருட்களை விற்பனை செய்வதிலும் தேவையானவற்றைப் பெறுவதிலும் பல இடர்ப் பாடுகளைச் சந்தித்தனர் இவைகளுக்கு மேலாக அவர்களது பொருட்களுக்கு ஆங்காங்கு விதிக்கப்படும் சுங்கம், ஆயம் என்ற வரிப்பாடுகளுடன் இசுலாமியர் என்ற முறையில் அவர்கள் தனியாக சோனகவரி[11] என்றொரு இறையினைச் சோழநாட்டில் செலுத்த வேண்டிய நிர்ப்பந்தம் இருந்தது. ஆனால் இத்தகைய வரி எதுவும் பாண்டிய நாட்டில் இசுலாமியருக்கு விதிக்கப்படவில்லை. ஆதலால் அவர்களது வாணிகத்தைச் சிறப்பாகத் தொடர்ந்து வந்தனர் இதன் காரணமாக அரபு நாட்டு தினார் (பொன்னா லானது) திர்ஹம் (வெள்ளியாலானது) நாணயங்கள் பாண்டிய நாட்டுச் செலாவணியில் செல்லும் காசுகளாக இருந்தன.

திருப்புத்தூர் திருத்தளியில் உள்ள பாண்டிய மன்னன் கல்வெட்டு[12] ஒன்றில் பிராமணப் பெண்மணி ஒருவர் நுந்தா விளக்கு தர்மத்துக்குப் பத்து தினார் நாணயங்கள் வழங்கியதைத் தெரிவிக்கின்றது. மாறவர்மன் குலசேகர பாண்டியன் ஆட்சியின் பொழுது வழங்கப்பட்ட அரபுக்குதிரை ஒன்றுக்கு 220 தினார் வீதம் வழங்கப்பட்டதாகவும் அந்த மன்னரது ஆட்சியின் பொழுது மதுரைக் கருவூலத்தில் 1200 கோடி தினார் காசுகள் இருந்ததாகவும் வாசப் என்ற வரலாற்று ஆசிரியர் தெரிவித்துள்ளார்[13] அவர்களது வெள்ளிக் காசு திர்ஹம், திரம்மா என வழக்குப் பெற்றிருந்தது. ஸ்ரீவல்லப பாண்டியனது ஐந்தாவது ஆட்சியாண்டுக் கல்வெட்டு நுந்தா விளக்கு எரிய 90 திரம்மாவிற்கு சாவா, மூவாப்பேராடுகள் வாங்கி வழங்கப்பட்டதைக் குறித்துள்ளது.[14] குலோத்துங்க சோழனது 24-வது ஆட்சியாண்டுக் கல்வெட்டு[15] இரவு சந்தி விளக்கு ஒன்றிற்காக நான்கு திரம்மம் வழங்கப்பட்டதைத் தெரிவிக்கிறது. மற்றும் சடையவர்மன் குலசேகரபாண்டியனது சுத்தமல்லிக் கல்வெட்டு[16] குலசேகரப் பேரேரியை ஆழப்படுத்த 10 திரம்மாக்கள் வழங்கப்பட்டதைத் தெரிவிக்கிறது. மேலும் அருப்புக்கோட்டை, கோவிலாங்குளம், மேலக்கொடுமலூர், மதுரை, குடுமியான்மலை, நெய்வாசல், சிவபுரி, குருவித்துறை ஆகிய ஊர்க்கல்வெட்டுகளிலிருந்தும் இசுலாமியரது திரம்மா நாணயம் செலாவணியில் இருந்ததையும் அதற்கான மதிப்பினையும் தெரிந்து கொள்ள முடிகிறது இராமநாதபுரம் பகுதியில் அஞ்சு வண்ணத்தாரது திரம்மா நாணயம் அஞ்சு மேனி திரம்மம் என 13-ஆம் நூற்றாண்டு வரை புழக்கத்திலிருந்ததாக ஆசிரியர் டாக்டர். ஏ. அப்பாதுரை அவர்கள் வரைந்துள்ளார்.[17] இந்த இரு வகையான நாணயங்களும் 14-ஆம் நூற்றாண்டு வரை செலாவணியிலிருந்து விஜயநகர ஆதிக்கம் மதுரையில் ஏற்பட்டவுடன் மறைந்து விட்டன.

பாண்டிய நாட்டின் வாணிபத்திற்கு வளமை சேர்த்த இசுலாமியரைப் பாண்டியர்கள் பரிவுடன் ஆதரித்தனர். மதுரையில் இருந்த முஸ்லிம்களது தலைவரான காஜி தாஜுத்தீனன் என்பவரை பாண்டிய நாட்டுக் காஜியாக அங்கீகரித்ததுடன், மதுரை முஸ்லிம்களது குடியிருப்பில் (இன்றைய காஜியார் தெரு) தொழுகைப்பள்ளி ஒன்றினை நிர்மாணித்து உதவியதுடன், அதனைப் பராமரிக்க விரகனூர், புளியங்குளம் ஆகிய ஊர்களையும் இறையிலியாக வழங்கினான்.[18]

இதனைப் போன்றே கீழ்ச்செம்பி நாட்டில் பவுத்திர மாணிக்கப் பட்டினத்தில் அமைந்திருந்த பிழார் பள்ளிக்கு ஆம்புத்தூர் முதலிய ஊர்களை இரண்டாம் மாறவர்மன் சுந்தரபாண்டியன் கி. பி. 1246-ல் வழங்கியதை திருப்புல்லாணிக் கோயில் கல்வெட்டு தெரிவிக்கின்றது.[19]

இத்தகைய ஊக்குவிப்புகள் மாறவர்மன் குலசேகரபாண்டியன் ஆட்சியிலும் தொடர்ந்துள்ளன. அப்பொழுது ஆண்டு தோறும் பதினாயிரம் அரபிக் குதிரைகள் பாண்டிய நாட்டில் இறக்குமதி செய்யப்பட்டன. குதிரைகளின் கரை இறக்கத்தைக் கண்காணிப்பதற்காகக் காயல்பத்தன், மாலிபத்தன் ஆகிய துறை முகங்களில் ஆளுநராக சுல்தான் ஜமாலுதீன் என்ற அரபு நாட்ட வரை நியமனம் செய்ததுடன், மதீனத்தைச் சேர்ந்த சுல்தான் ஐக்கியுத்தீன் என்பவரைத் தமது அமைச்சராகவும் பாண்டியன் நியமனம் செய்தான். இந்த இரு முஸ்லீம்களும் பாண்டியனுக்கு மிகச் சிறப்பான பணியாற்றினர் எனத் தெரிகின்றது.[20]

சுல்தான் ஜமாலுதீனும், அவரது மக்களும் கி. பி. 1279-1289க்கு இடைப்பட்ட காலத்தில பாண்டிய மன்னரது அரசுத்தூதுவர் களாக நான்குமுறை சீனச்சக்கரவர்த்தி குப்லாய்கானது அரசவைக்குச் சென்று வந்தனர்[21] பின்னர் மதுரையில் ஏற்பட்ட நாயக்கர் அரசில் இசுலாமியர் கோட்டைப் பாதுகாவலராகவும், மன்னரது மெய்க்காப்பாளராகவும் நியமனம் செய்ய பெற்றிருந்தனர்.[22] புன்னைக்காயலிலும், தூத்துக்குடியிலும் நிலைகொண்டிருந்த போர்த்துக்கீசியர் பரங்கிகளது செல்வாககினைச் சிதறடிப்பதற்குக் காயல் பட்டினத்தைச் சிறந்த மாற்றுத்துறைமுகமாக அமைப் பதற்கும் மன்னர் திருமலை நாயக்கர் இசுலாமியருக்கு அனைத்து உதவிகளையும் நல்கினார். முதலியார் பிள்ளை மரைக்காயர் என்பவரைத் தமது பிரதிநிதியாக மன்னர் வளைகுடாப் பகுதிக்கு நியமனம் செய்து அவருக்குப் பல சிறப்புகளையும், சலுகைகளையும் வழங்கினார்.[23] மற்றும் இராணிமங்கம்மாள் விஜயரங்கசொக்க நாதர் ஆகிய மன்னர்கள் ஆட்சியிலும் இசுலாமியருக்குப் பல ஊக்குவிப்புகளும் கொடைகளும் தொடர்ந்தன.

ஆட்சிகள் பல மாறினாலும் பாண்டிய நாட்டின் குடிமக்களாக ஒன்றி விட்ட இசுலாமியர் இங்குள்ள மக்களுடன் நல்ல உறவு

களைக் கொண்டு இருந்தனர் என்பதைச் சில வரலாற்றுச் செய்திகள் தெரிகின்றன. தீர்த்தாண்டதானத்துச் சிவன் கோயிலைப் புதுப்பித்துக் கட்ட அங்குள்ள குடிமக்கள் கி.பி 1269ல் கூடிப்பேசித் திட்டமிட்ட கூட்டத்தில் அந்த ஊர் அஞ்சு வண்ண இசுலாமியரும் கலந்துகொண்டனர்.[24] 16-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் புனித நாகூர் ஆண்டகையின் பேராளர் புனித பக்ருதின் அவர்கள் புதுக்கோட்டைப் பகுதிக் காட்டில் தவம் மேற்கொண்டு இருந்த பொழுது அவ்வழி சென்ற அந்தணப்பெண் ஒருத்தியை ஆறலைக் கள்வர்கள் வழிமறித்து வம்பு செய்தனர். அந்த அக்கிரமத்தை தடுக்க முயன்ற புனித பக்ருதீன் அவர்களைக் கள்ளர்கள் குத்திக் கொன்றனர். அந்தப்புனிதரது முயற்சியையும் முடிவினையும கண்ட மங்கை நல்லாள் மனம் கரைந்து தன்னையே மாய்த்துக் கொண்டாள் என்பது வரலாறு.[35] மனிதாபிமானத்துக்கு மதம் முட்டுக்கட்டையல்ல என்பதை இந்த நிகழ்ச்சி எடுத்துக் காட்டுகிறது.

வாழ்வியலிலும் வழிபாட்டு நெறிகளிலும் பாண்டிய நாட்டு மக்களுடன் இசுலாமியர் வேறுபாடு உடையவராக இருந்த பொழுதும் சமுதாய வாழ்வில் அவர்களது நடைமுறைகள் ஒன்றுபட்ட தன்மையினைக் கொண்டவைகளாக இருந்ததை இன்னும் இரண்டு வரலாற்று ஆவணங்கள் சுட்டிக்காட்டுகின்றன. மேலும் கி.பி. 1719ல் மதுரைச் சீமை வத்தலகுண்டு கோயில் பராமரிப்புப் பற்றித் தக்க முடிவுகளை மேற்கண்ட 8 சமூகத்தினரில் ஒரு பிரிவினராக இசுலாமியரும் தங்களது பங்கினைச் செலுத்த ஒப்புதல் வழங்கியதையும்[26] திருநெல்வேலிச் சீமை திருக்குற்றாலநாதர் திருவிழா கட்டளைக்கு அகமது பேட்டை மனித சேகரத்தைச் சார்ந்த முஸ்லீம் வணிகர்கள் மாதந்தோறும் மகமை செலுத்த கி.பி. 1788-இல் உடன்பட்டதையும்[27] தெரிவிக்கின்றன.

இங்ஙனம் இந்த மண்ணின் மரபுகளுக்கு ஏற்பத் தங்களது வாழ்க்கையை வழிப்படுத்திக் கொண்ட இந்த இசுலாமியரது தாக்கம் தமிழ்ச் சமுதாயத்தின் பல நிலைகளில் பிரதிபலித்து நின்றது அவர்களது ஆடை அணிகலன்கள் கட்டுமானக்கலை

யுக்திகள் என்பன அவை. முன்னர் தமிழ் மொழியை வாய் மொழியாகக் கொண்டிருந்த இவர்கள் சில நூற்றாண்டுகளுக்குள் தமிழைத் தாய்மொழியாகக் கொண்டதால் அவர்களது அரபி, பார்சி. துருக்கி மொழிச் சொற்கள் திசைச்சொற்களாக மருவி வந்து தமிழ்மொழிக்கு வளம் சேர்த்துள்ளன. அத்துடன் அரபுத்தமிழ் என்ற புதிய தமிழும் உருவாகி உள்ளது. கி.பி. 1570 முதல் மரபு வழியிலான 2000க்கும் மேற்பட்ட இலக்கியங்களை அவர்கள் இயற்றித் தமிழ் மொழிக்கு அணி சேர்த்துள்ளனர் என்பது சிறப்பான செய்தி ஆகும். சிறுபான்மையினரான பாண்டிய நாட்டு இசுலாமியர் அரசியல், சமூகம், மொழி ஆகியவற்றிற்கு உதவியுள்ளனர்.

---

1. தீர்த்தாண்டதானம் கல்வெட்டு - ARE 598/1926
2. பரஞ்சோதி முனிவர் - திருவிளையாடல் புராணம் – படலம் 58
3. தமிழ்நாடு ஆவணக்காப்பகம் - Tinnevely District Records Vol. 3570 – 25/1/1810 - p. 620
4. மதுரை கோரிப்பாளையம் கல்வெட்டு - ARE 77/1905.
5. கிருஷ்ணசாமி அய்யங்கார். Dr. S. South India and her Mohamodan Invaders (1921) - p. 6
6. Hussaini. Dr. S. A. Q. - History of Pandya Country (1962) - p.p. 47 and 49
7. மீசல் வண்ணக்களஞ்சியப் புலவர் – தீன் நெறி விளக்கம் (பதிப்பு) ஹிஜிரி 1312.
8. திருப்புல்லாணி திருக்கோவில் கல்வெட்டு - ARE 116/1903.
9. Marco Polo - Vol. 2 p. 326
10. Neelakanta Sastri K. A., Foreign Notices of South India (1972) - pp. 281 and 283
11. திருக்காளத்திக் கல்வெட்டு – ARE 172/1903
12. திருப்பத்தூர் திருக்கோவில் கல்வெட்டு ARE 136/1908
13. Neelakanta Sastri K. A. - Pandyan Kingdom (1929)-p. 196

14. சேரன்மகாதேவி கல்வெட்டு - ARE 641/1916

15. மாறமங்கலம் கல்வெட்டு ARE 192/1903

16. சுத்தமல்லிக் கல்வெட்டு - ARE 459/1914

17. Appadurai DPS - Economic Conditions of South India (Vol. 2)

18. Hussaini. Dr. S. A. Q - History of Pandyan Country (1962) p.55

19. திருப்புல்லாணித் திருக்கோவில் கல்வெட்டு - 116/1903/ARE

20. Elliot and Dawson - History of India as told by its Historians - Vol : I - pp. 69-70 and Vol. III - p. 33

21. Neelakanta Sastri K. A. - Foreign Notices of South India (1972) - p 152 to 156

22. Antony Cronin - Pearl of East and Sathyanatha Iyer, P History of Madurai Nayaks (1924) p.p. - 255, 312 and 314

23. Arunachalam A. - History of Pearl Fishing (1952)- p. p. 114 to 115

24. தீர்த்தாண்டதானம் கல்வெட்டு - ARE 598/1926

25. தஞ்சாவூர் செப்பேடு - தொல்லியல் கருத்தரங்கு (1983) - பக்கம் 3

26. Rangacharya K. V. - A Topographical List of Inscriptions (1909) - S. No. 226, Nilakkottai Taluk

27. திருக்குற்றாலம் திருக்கோவில் செப்பேடு - ARE 43/1946



18 to 24

# தாருகாபுரம் செப்பேடு

**செ. சந்திரவாணன்**
காப்பாட்சியர்
தொல்பொருள் ஆய்வுத்துறை, குற்றாலம்

## அமைவிடம்

திருநெல்வேலி கட்டபொம்மன் மாவட்டத்துச் சங்கரன் கோயில் வட்டத்துள் அமைந்த ஒரு சிற்றூர் தாருகாபுரம். இவ்வூர் குற்றாலத்திலிருந்து மதுரை செல்லும் சாலையில் நாற்பதாவது கி. மீட்டரில் அமைந்துள்ள வாசுதேவநல்லூரிலிருந்து தென்கிழக்கில் சுமார் 3 கி.மீ. தொலைவில் அமைந்துள்ளது. ஊராட்சி ஒன்றிய அமைப்புடைய இவ்வூர் பாண்டியர் குடைவரைக்கோயில் உள்ள மலையடிக்குறிச்சி மலைக்கு வடக்கிலும், பிணக்கறுத்த மகாதேவர் (மத்யஸ்தநாதர்) ஆலயத்திற்குக் கிழக்கிலும், வாசுதேவநல்லூர் சிந்தாமணிநாதசுவாமி கோயிலுக்குத் தெற்கிலும், சங்கரன் கோயில் செல்லும் சாலைக்கு மேற்கிலும் அமைந்துள்ள வளமான நிலப் பகுதிகளைக் கொண்டு விளங்குகின்றது.

## ஜமீன் செப்பேடு

இவ்வூரில் தலைவன் கோட்டை ஜமீன்களின் பரம்பரையினர் வாழ்ந்து வருகின்றனர். இராமநாதபுரம் பாஸ்கர சேதுபதியின் பேத்தி சிவபாக்கிய நாச்சியாரை மணமுடித்த இந்திரன் இராமசாமிப் பாண்டியன் என்று பெயர் கொண்ட ஜமீன்தாரிடம் ஒரு செப்பேடு உள்ளது. இச்செப்பேடு 22 செ.மீ. நீளமும் 12 செ.மீ. அகலமும் கொண்ட தனிச்செப்பேடாகக் காணப்படுகின்றது. செப்பேட்டின் இருபுறமும் தமிழ் மொழியில் எழுதப்பட்டுள்ளது. முதல் பக்கத்தில் 1 முதல் 45 வரிகளும், இரண்டாம் பக்கத்தில் 46 முதல் 74 வரிகளும் காணப்படுகின்றன.

## செய்தி

இச்செப்பேடு, தாருகாபுரம் ஜமீன்களின் பரம்பரையினருக்குக் கொடுக்கப்பட்ட 'இந்திரத் தலைவன்' என்றுபட்டப் பெயர் பற்றியும், நிலத்தானம், விருதுகள், கட்டளைகள் பற்றியும் கூறிச்

செல்கின்றது. தென்காசிப்பாண்டியர் ஆளுகைக்கு உட்பட்டிருந்த கிழவை நாட்டில் கொண்டையன் கோட்டை மரபு வழி மறவரில் ஒருவரான 'திருவண்ணாத தேவன்' என்பவன் செப்பேட்டின் நாயகனாகக் குறிப்பிடப்படுகின்றான். இவன் செய்த வீரச்செயலுக்காக 'இந்திரத்தலைவன்' என்ற பட்டம் கொடுக்கப்பட்ட செய்தியினைத் தெரிவிக்கின்றது. தாருகாபுரத்திலிருந்து கிழக்கிலுள்ள வீரிருப்பு என்ற ஊரினைச் சேர்ந்த மலைக்காட்டில் சந்திரன் என்றொரு கொடிய மிருகம் இருந்து கொண்டு பலரைக்கொன்று வந்ததாகவும் அம்மிருகத்தை யாரும் வெல்ல முடியாமல் போனதாகவும், அப்படிப்பட்ட சங்குவெள்ளை நிறமுடைய மிருகத்தைக் கொன்ற செய்தியையும் குறிப்பிடுகின்றது. இவ்வாறு அம்மிருகத்தைக் கொன்ற திருவண்ணாத தேவனுக்கு 'இந்திரத் தலைவன்' என்ற பட்டமும் கொடுத்துத், தண்டிகை, பல்லக்கு, இரட்டைத் தீவட்டி, இரட்டைக்குடை, மகரக்குடை, கரங்குடலும், கருடக்கொடி முதலாக விருதுகளும் தவளச்சங்கு, நடன, நாடக சங்கீதம் இசைத்துக் கொள்ளவும், நாகபுரம் இந்திரபுரம் என்று ஊர்ப்பெயரிட்டுக் கொள்ளவும், அவ்வூரில் கோட்டை கட்டிக் கொள்ளவும் அனுமதிக்கப் பட்டது. இவ்வாறு விருது கொடுத்தது மட்டுமல்லாது மானியமாக விட்ட நிலத்தின் நான்கெல்லை பற்றியும் குறிக்கின்றது. அவை, 'சங்கர நயினார் கோயில் மேலத் தெரு நடுநாராகத்துக்கும் குத்துக் கல்லுக்கும் மேற்கு, சாலைக்கு வடக்கு, கருமலைக்குக் கிழக்கு, வாசுதேவநல்லூர் கூனி ஆத்துக்குத் தெற்கு' என்று செப்பேட்டுள் குறிக்கப்பட்டுள்ளது. இப்படி எல்லை தெரிவிக்கும் போதில் கருமலை என்ற ஒரு சொல் பயன்படுத்தப்பட்டுள்ளதைக் காண முடிகின்றது. இது மேற்குத் தொடர்ச்சி மலையைக் குறிக்கிறது. இன்றும் சிலர் இதை கருமலை என்றே அழைக்கின்றனர்.

**ஊர்ப் பெயர்கள்**

மேற்சொன்ன 'நான்கெல்லைக்குட்பட்ட பூமியாவது' என்று கூறி, இருபது ஊர்களின் பெயர்களை இச்செப்பேடு குறிக்கின்றது. அப்பெயர்கள் வருமாறு. வேட்டகாரன்பட்டி, திருவேட்டநல்லூர், பாண்டியக் கோனார் குளம், இராமலிங்கபுரம், பின்னைக்குளம், புளியங்குடி, வாசுதேவநல்லூர், தாருகாபுரம், மலையடிக்குறிச்சி, பட்டகுறிச்சி, அரியூர், பெரியூர், புதூர், இருமன்குளம், வீரிருப்பு, வேப்பங்குளம், நயினார்குளம், இந்திரபுரம், நாகபுரம், முள்ளிக் குளம், வடமலைபுரம் என்பன.

இவ்வூர்ப் பெயர்கள் இன்றளவும் இதே பெயர்களில் வழங்கப் பட்டு வருகின்றன எனினும் ஒரு சில ஊர்ப்பெயர்கள் சற்றே உச்சரிப்பு நிலையில் வேறுபட்டுள்ளன. வேட்டைக்காரன் பட்டி என்ற ஊர்ப்பெயர் செப்பேட்டுள் வேட்டகாரன்பட்டி என்று குறிக்கப்பட்டுள்ளது. ஆனால் தற்போது இப்பெயர் 'வேட்டறம் பட்டி' என்றழைக்கப்பட்டு வருகின்றது.

இதைப் போன்று 'வடமலைபுரம்' என்ற ஊர்ப்பெயர் 'வடமலா புரம்' என்றும் 'வடமலையப்ப புரம்' என்றும் தற்போது அழைக்கப் படுகின்றது. இந்திரபுரம், நாகபுரம் என்றழைக்கப்பட்ட கோட்டை யுள்ள ஊர்ப்பகுதி இச்செப்பேட்டின் பட்டப்பெயர்ப்படி தலைவன் கோட்டை என்று அழைக்கப்படுகின்றது என்பதுடன், பொதுவாக இவ்வூர்கள் அடங்கிய பகுதியைப் பேச்சு வழக்கில் 'பதினெட்டு பட்டி' என்று மக்கள் அழைக்கின்றனர்.

### பட்டயச் சாதனம்

இவ்வாறு தானமாகக் கொடுக்கப்பட்ட ஊர்களைக் குறிப்பிடும் போது 'சறுவ மானியக் கோட்டைக் கட்டளைக் கிறாமமாகப் பட்டைய சாதனம் எழுதிக் கொடுத்தபடி' என்று குறிப்பதுடன் அனுபவ நிலை கூறும்போது 'கல்லும் காவேரியும் புல்லும் பூமியும் உள்ளவரை புத்திர பாரம்பரையாய் சந்திராதித்தவரை மக்கள் மக்களாய் வழிவழிச் சீதனமாய் ஆண்டனுபவித்து வருவதாகவும், என்று இப்செப்பேடு கூறுகின்றது.

இதற்கு மேலும் இவர்களுக்குச் சங்கர நயினார் கோயில் ஆவுடைத் தாயார் சன்னதியில் தீர்த்தம், திருநீறு, சந்தனம், திரு மாலை, பாக்கு வெற்றிலை முதலில் கொடுக்கவும், தேர்த்திருவிழா வன்று தேர்வடம் முதலில் தொட்டு நடத்தவும் இந்தச் சாதனப் பட்டயம் சீவிலி மகாராஜா அவர்கள் இந்திரத் தலைவனுக்கு எழுதிக்கொடுத்தது என்றும் இச்செப்பேடு குறிப்பிடுகின்றது.

### சாட்சிகள், எழுதியவர்

இவ்வாறு எழுதப்பட்ட இந்தச் சாசனத்திற்குச் சாட்சியாக மூன்று நபர்களின் பெயர்கள் குறிப்பிடப்பட்டுள்ளன. அப்பெயர்கள்

பொக்குஷம் சூரசங்கு நாயக்கர், கடம்பூர் தடியத்தலைவன், வடகரை முடிபொறுத்த செம்புலித் தேவன்' என்பன. இச் செப்பேட்டை எழுதியவன் பெயர், 'சங்கர நயினார் கோயிலி லிருக்கும் சங்கரலிங்கம் பிள்ளை மகன் மீனாட்சி நாதன்' என்று அறிய முடிகின்றது.

## ஓம்படைக்கிளவி

செப்பேட்டின் இறுதியில் ஓம்படைக்கிளவியாகக் கீழ்வரும் தொடர்கள் காணப்படுகின்றன. 'நாம் எழுதிக் குடுத்த இந்தப் பட்டயத்துக்கு யாதாமொரு ராசாக்கள் சீமை பரிபாலனம் பண்ணுகிற பேர்கள் குடிலம் பண்ணி தோஷத் துரோகம் நினைத் தாலும் வலுவின் பேரில் கதட்டிக் கொண்டாலும் அவர்கள் கங்கைக் கரையில் காராம் பசுவைக் கொன்ற தோஷத்திலும் தீர்த்தக்கரையில் பிராமணரைக் கொன்ற தோஷத்திலும் போகக் கடவாராகவும் என்று கூறி 'சங்கரலிங்கம் ஆவுடைத் தாயார் துணை' என்று முடிகின்றது.

## செப்பேட்டின் காலம்

இச்செப்பேட்டின் தொடக்கத்தில், 'சாலிவாகன சகாத்தம் **1127**-ன் மேல் செல்லா நின்ற கொல்லம் **382**-ஆம் வருடம் என்று காணப்படுகின்றது. இதன்படிச் செப்பேட்டின் காலம் கி.பி. **1205** அல்லது **1207** என்று வருகின்றது. மேலும் தமிழ் ஆண்டு குறிப்பிடுகையில், நள வருடம் ஆடிமாதம் ஏழாம் தேதி சோமவாரமும் அசுபதி நட்சத்திரமும் சுபயோக சுபகரணமும் பெற்ற நாளில் தென்காசியிலிருக்கும் சீவிலி மகாராஜா அவர்கள் இச்செப்பேட்டை வழங்கியதாகவும் குறிப்பிடப்பட்டுள்ளது.

இச்செப்பேடு கி. பி. 1205 - இல் எழுதப்பட்டது என்று கொண்டால் அப்போது தென்காசிப் பாண்டியர்கள் ஆட்சிக்கே வரவில்லை என்பது வரலாற்றுண்மை. மன்னன் பெயர் குறிப்பிடுகையில் 'சீவிலி மகாராஜா' என்று குறிப்பிட் டுள்ளமையால் இம்மன்னன் தென்காசிப் பாண்டிய மன்னர்களின் பரம்பரையின் இறுதி நிலையில் வரக்கூடிய 'சீவல வரகுணராமன்' என்று பெயர் கொண்டவனாக இருக்கலாம் என்பது தெரிகிறது. இம்மன்னனின் ஆட்சியாண்டு குறிக்கையில் சகம் **1675** என்று

குறிப்பதனால், இம்மன்னன் கி. பி. *1753*-இல் ஆட்சி செய்தவன் என்பதும் அறியமுடிகின்றது, எனவே இச்செப்பேடு இவனின் ஆட்சிக் காலத்தில் வழங்கப்பட்டிருக்க வேண்டும் என்பதால் முன் சொன்ன சக ஆண்டு தவறானது என்பது தெரிகின்றது.

**செப்பேடு** **பக்கம்-1**

1 உ ஸ்ரீ சாலிவாகன சகார்த்தம் சூாஉ௰ என்ஸ்ரீ செல்
2 லாநின்ற கொல்லம் ஈாஅ௰உ ஸ்ரீ நாடூ ஆடி மீ எ
3 உ சோமவாரமும் அசுபதி நட்செத்திரமும் சுபயோ
4 க சுபகரணமும் பெற்றனாளில் தென்காசியிலிரு
5 க்கும் சீவிலி மகாராசா அவர்களோம் கிழவை
6 னாட்டில்க் கொண்டையன் கோட்டை மறவரில்
7 த்திருவண்ணாத தேவர் யிந்திரத் தலவனுக்கு நில
8 மைக் காணியாட்சைச் சாதனப் பட்டையம் எழு
9 திக் குடுத்தபடி பட்டையமாவது நம்முடைய வீரி
10 ருப்பு மலையங் காட்டில்ச் சந்திரனென்றொரு துஷ்ட
11 மிருகமிருந்து கொண்டு அனேகம் இராசாக்க
12 ளையெல்லாம் உயிர்வதை செய்து போட்ட படியினா
13 லே அந்தச் சந்திரனென்கிற சங்கு வெள்ளைக் கொடிய
14 னை ஒரு ராசாக்களாகிலும் செயம்பண்ண மாட்டாமல்
15 போன படியினாலே அப்படியக் கொத்த துஷ்டமிறு
16 கத்தைத் தான் வெட்டி செயம் பண்ணின படியினாலே த
17 னக்கு இந்திரத் தலவவென்று பட்டமுங் கொடுத்து

18 த்தண்டிகை பல்லக்கும் ரெட்டைத் தீவட்டியும் ெ
19 ரட்டைக் குடையும் மகரங்குடையும் கரங்குட
20 ாலு கெருடக் கொடி விருதும் உபைய சாம
21 ரமும் தவளச்சங்கும் நடனாடக சங்கீதம் யி
22 வ்வளவு விருதும் குடுத்து நாகபுரம் யிந்திரபு
23 ரமென்று பேருங் குடுத்து தேங்காயும் தெ
24 ாட்டுக்குடுத்து யிந்திரபுரம்னாக புரத்தில்க்
25 கோட்டையும் போட்டுக்குடுத்து திருவண்
26 ணா தேவன் யிந்திரத் தலவனுக்கு நாம் எழு
27 திக்குடுக்கிற உம்பளச் சறுவ மானி(ய)ப் பூமியாவ
28 து சங்கர நயினார் கோவில் மேலத் தெரு
29 நடு நாராசரத்துக்கும் குத்துக்கல்லுக்கும்
30 மேற்கு சாலைக்கு வடக்கு கருமலைக்கு கிழக்கு வ
31 ாசு தேவநல்லூர் கூனி ஆத்துக்குத் தெற்கு
32 யிந்த நான் கெல்கைக்குள் பட்ட பூமியா
33 வது வெட்டகாறன்பட்டி திருவேட்டனல்
34 லூர் பாண்டியக் கோனார் குளம் இராம
35 லிங்கபுரம் புன்னைக்குளம் புளியங்குடி வ
36 ாசு தேவநல்லூர் தாருகாபுரம் மலை
37 யடிக்குறிச்சி பட்ட குறிச்சி அரியூர் பெரி
38 யூர் புதூர் யிருமன்குளம் வீரிருப்பு வேம்ப
39 ங்குளம் நயினார் குளம் இந்திரபுரம் னாக
40 புரம் முள்ளிக்குளம் வடமலைபுரம் யிது முத
41 லான கிறாமமெல்லாம் சறுவ மானியப் ே
42 காட்டைக் கட்டளைக் கிராமமாக தனக்
43 கு நாம் பட்டைய சாதனம் எழுதிக் குடுத்
44 த படியினாலே கல்லுங் காவேரியும் புல்லு
45 ம் பூமியும் உள்ளவரையும் புத்திர பாரம்பரை

பக்கம் - 2

46 யாக சந்திராதித்தர் உள்ளவரையும் மக்கள்
47 மக்களுக்குச் சீதனங்களும் விலைவிக்கிறைய

48 தான தருமங்களுக்கும் உருத்தாக ஆண்
49 டனுபவித்துக் கொள்வாராகவும் சங்க
50 ர நயினார் கோவில் ஆவுடைத்தாய் சன்
51 னிதானத்தில் தனக்கு தீர்த்தம் திருநீ
52 று சந்தனம் திருமாலை பாக்கு வெத்திலை
53 முன்னிதாக குடுத்து தேர்வடமும் முன்
54 னிதாகத் தொட்டு தேர் நடத்திவிக்கிற
55 து யிப்படிக்கு சம்மதித்து சாதன பட்டை
56 யம் எழுதிக் குடுத்தோம் சீவிலி மகார
57 ாசா அவர்களோம் யிந்திரத் தலவனு
58 க்கு மிதுக்கு சாட்சி பொக்குஷம் சூரசங்
59 கு னாயக்கர் கடம்பூர்த் தடியத் தலவன்
60 வடகரை முடி பொறுத்த செம்புலித் தே
61 வன் யிந்த சாதனப் பட்டையம் எழுதினே
62 ன் சங்கர நயினார் கோவிலிருக்கு ச
63 ங்கற லிங்கம் பிள்ளை மகன் மீனாட்சிநாத
64 ன் எழுத்து இந்தப்படிக்கு நாம் எழுதிக்
65 குடுத்த பூமிக்கும் யிந்தப் பட்டையத்துக்கும்
66 ஆதாமொரு ராசாக்கள் சீமை பரிபாலனம்
67 பண்ணுகிற பேர்கள் குடிலம் பண்ணித் தோ
68 ஷத் துரோகம் நினைத்தாலும் வலுவின் பேரி
69 ல் கதட்னக் கொண்டாலு மவர்கள் கெங்கை
70 கக் கரையில்க் காராம் பசுவைக் கொன்றதே
71 ாஷத்திலும் தீர்த்தக் கரையில்ப் பிராமண
72 ரைக் கொன்ற தோஷத்திலும் போகக் கட
73 வாராகவும் யிந்தப்பட்டுக்க உ
74 ம சங்கரலிங்கம் ஆவுடைத்தாயார் துணை உ

# தமிழக நுண்கலை வரலாற்றில் நகரத்தார் பங்கு

**நா. வள்ளி**
முதுநிலை விரிவுரையாளர்
இராமசாமி தமிழ்க் கல்லூரி, காரைக்குடி

பாண்டிய நாட்டைத் தாயகமாகக் கொண்ட நகரத்தார்கள் பசும்பொன் முத்துராமலிங்கத் தேவர் மாவட்டத்திலும், புதுக் கோட்டை மாவட்டத்திலும் முன்பு 96 ஊர்களிலும் தற்போது 74 ஊர்களிலும் வசிக்கிறார்கள். இவர்கள் வசிக்கும் பகுதிக்குச் 'செட்டி நாடு' என்று பெயர். தமிழக வரலாற்றை நோக்கும்போது, நாட்டை ஆண்ட மன்னர்களே சிற்பம், கட்டடம், ஓவியம், இசை, இலக்கியம் போன்ற நுண்கலைகளை வளர்க்கும் செவிலித் தாயார் களாக விளங்கியதைக் காண்கிறோம். அவர்களுக்குப் பிறகு ஐரோப்பியர் ஆட்சிக் காலத்தில் இந்நுண்கலைகள் பேணுவாரின்றிக் கிடந்தபோது இக்கலைகளை ஆதரித்தவர்கள் நகரத்தாரே ஆவர்.

**கட்டடச் சிற்பக்கலைகள்**

18, 19-ஆம் நூற்றாண்டுகளில் வணிகத்தின் பொருட்டு இலங்கை, பர்மா, மலேயா சிங்கப்பூர், வியட்நாம், தாய்லாந்து, இந்தோனேஷியா முதலிய கிழக்காசிய நாடுகளுக்குச் சென்று பெரும்பொருள் ஈட்டி, ஈட்டியதில் ஒரு பகுதியை மகமைப்பண மென எடுத்து வைத்து, அதைக் கோயிற்பணிகளுக்குச் செலவிட்டனர். அக்காலத்தில் கிறித்துவ, இசுலாமிய சமயங்கள் ஏற்றங்கண்டதாலும் இந்து மன்னர்கள் ஆற்றல் இழந்து பிற சமயத்தினரின் படைத் துணையை நாடி ஓடியதாலும், தமிழகக் கோயில்கள் பாதுகாப் பாரற்றும், பேணுவாரற்றும் கிடந்தன.

தமிழகத்துப் பெருங்கோயில்கள் பல, போர் அணிகள் நிறுத்தப் பட்டிருந்த பாடி வீடுகளாகவும், கொத்தளங்களாகவும் பயன்படுத்தப் பட்டன. உதாரணமாகச் சிதம்பரம் கோவிலில் சாஹூஜி என்ற மராத்தியன், பகைவருக்கு அஞ்சித் தன் படையுடன் அடைக்கலம்

புகுந்தான். பிரெஞ்சுக்காரரும், ஆங்கிலேயரும், ஐதரலியும் மாறி மாறி இக்கோயிலைத் தம் கொத்தளங்களாகப் பயன்படுத்தி வந்தனர். இக்கோயில் தொடர்ந்து 35 ஆண்டுகள் இராணுவத்தினர் வசம் இருந்தது. பீரங்கித் தாக்குதல்களால் இக்கோயில்களின் மண்டபங்களும், சுற்றாலைகளும் இடியுண்டு அழிந்தன.

இதுபோலப் பல காரணங்களால் பாடல்பெற்ற பல தலங்கள் பாழடைந்து கிடந்தன. இக்கோயில்களையெல்லாம் தேடித்தேடித் திருப்பணி செய்தனர், நகரத்தார்கள். மேலும் புதிய கல் திருப்பணிகளை மேற்கொண்டும், பல கோயில்களை விரிவுபடுத்தியும் இந்து சமயத்துக்குப் பெருந்தொண்டாற்றினர். நகரத்தார் திருப்பணி செய்த ஆலயங்கள் திராவிடக் கட்டடக் கலைக்கும், சிற்பக்கலைக்கும் விளக்கமாகத் திகழ்கின்றன.

இவர்கள் எப்போதும் கோயிற் பணிகளில் ஈடுபட்டிருந்ததால் சிற்பக்கலையில் வல்லுநர்களான ஸ்தபதிகள் செட்டிநாட்டுப் பகுதிகளில் எழுவாங்கோட்டை போன்ற ஊர்களில் நிரந்தரமாகக் குடியேறினர். இன்றைக்குச் செட்டிநாட்டு ஸ்தபதிகளுக்கு உலகமெங்கும் நல்ல மதிப்பிருக்கிறது.

நகரத்தார் காலச் சிற்பங்களை, கட்டடச் சிற்பங்கள், சுற் சிற்பங்கள், செப்புப்படிமங்கள், சுதைச் சிற்பங்கள், மரச்சிற்பங்கள், வாகனங்கள் என்று பலவாறாகப் பகுத்து ஆய்வு செய்யுமளவு அவர்களது பணி சிறந்து பரவியிருக்கிறது.

தமிழகத்தில் மட்டுமல்லாது காசிமுதலாகப் பல வடநாட்டுக் கோயில்களும் இவர்களால் திருப்பணி செய்யப்பட்டன. காசி விசாலாட்சி கோயில் தென்னாட்டுச் சிற்ப மரபையொட்டி நகரத்தார்களால் கட்டப்பட்டதாகும். தாங்கள் பொருளீட்டச் சென்ற பர்மா, மலேசியா, இலங்கை போன்ற அயல்நாடுகளிலும் தென்னாட்டு முறைப்படி ஏராளமான கோயில்களைக் கட்டி சைவ சமயத்தையும், திராவிடச் சிற்ப மரபையும் பரப்பியுள்ளனர்.

நகரத்தார் கோயில்களுள் நேமங்கோயில்,[1] பிள்ளையார்பட்டி மாற்றூர், இலுப்பைக்குடி, வைரவன்கோயில் போன்ற கோயில்களிலுள்ள தூண்களில் செதுக்கப்பட்ட இறை உருவச் சிற்பங்கள் நுணுக்கமான வேலைப்பாடுடையவை.

19ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அமராவதிப் புதூர் வயிராகரம் குடும்பத்தாரால் அக்காலத்திலேயே 25 இலட்சம் ரூபாய் செலவில் திருப்பணி செய்யப்பட்டது. மதுரை மீனாட்சி அம்மன் கோயிலிலுள்ள சிற்ப வேலைப்பாடுகள் நிறைந்த கம்பத்தடி மண்டபம் நகரத்தார் திருப்பணியே. இங்கு தூண் ஒன்றிலுள்ள மீனாட்சி அம்மன் திருமணக்கோலச் சிற்பம் உலகப் புகழ் பெற்றது.

நகரத்தார் கருங்கல் திருப்பணி செய்த கோயில்கள் அனைத்தும் பெரும்பாலும் ஒரே மாதிரியான அமைப்புடையவை. பாண்டிய நாட்டுச் சிற்பிகள் தாங்கள் ஒரு வேலையைத் தொடங்குமுன்பு ஆவுடையார்கோவில் கொடுங்கை நீங்கலாக, மற்ற எந்தச் சிற்ப வேலையும் தங்களால் செய்ய இயலும் என்பதாக எழுதிக் கொடுப்பார்களாம். ஆனால் நகரத்தாரால் வளர்க்கப்பட்ட சிற்பிகள் வடித்த கோயிற் கொடுங்கைகள் அனைத்துமே ஆவுடையார் கோவில் கொடுங்கைகளுக்கு இணையாகச் சிற்ப நுணுக்கத்துடன் காணப்படுகின்றன.

நகரத்தார் கோயில் கோபுரக் கலையிலும் சிறந்து விளங்கினர். மதுரை மீனாட்சி அம்மன் கோயில் வடக்குக் கோபுரத் திருப்பணி அதற்குச் சான்றாகும். நாற்புறமும் கடல்சூழ்ந்துள்ள இராமேசுவரத் தீவிற்குக் கடல்வழியாகக் கற்களைக் கொண்டு சென்று இராமேசுவரம் கோயிலின் கிழக்குக் கோபுரத்தைக் கட்டி முடித்தவர்கள், தேவகோட்டை ஜமீன்தார் குடும்பத்தார் ஆவர். தேர்கள் மற்றும் ஏராளமான வாகனச் சிற்பங்களை மரத்திலும் வெள்ளியிலும் நகரத்தார் செய்து கொடுத்துள்ளனர்.

தங்களுக்கென ஒரு சிற்ப மரபை வகுத்துக்கொண்ட நகரத்தார்களின் வீடுகளும் கோயில்களைப் போலச் சிற்ப நுணுக்கங்களோடு கட்டப்பட்டன. வீடுகள் மிகப் பெரியவைகளாகக் குடும்பத்தார் அனைவரும் கூடி வாழ்வதற்கேற்பத் திருமணங்கள் போன்ற நிகழ்ச்சிகளை வீட்டிலேயே நடத்துவதற்கு ஏற்பக் கட்டப்பட்டன. பர்மாவிலிருந்து கொண்டுவந்த தேக்கு மரங்களால் சிற்ப வேலைப்பாட்டுடன் கதவுகளையும் தூண்களையும் அமைத்தனர். முகப்பு நிலைக் கதவுகளின் மேற்பகுதியின் நடுவில் திருமகளின் சிற்பமும், இருபுறமும் யானைகள், மற்றும் யாளிகள், குதிரைகள், கொடிக்கருக்குகள், பூவேலைப்பாடுகள் ஆகியவையும்

காணப்படும். இக்கதவுகள் இன்று அதன் சிற்ப வேலைப்பாடுகளுக்காகப் பல லட்சரூபாய் மதிப்புடையதாகத் திகழ்கின்றன. நகரத்தார்காலத் தூண்களில் போதிகைகள் நன்கு வளர்ந்த நிலையில் வாழைப்பூப் போன்று காணப்படும். இவர்களுடைய நகரவிடுதி, நகரச் சத்திரங்களில் இக்கட்டடக்கலையின் அமைப்பைக் காணலாம். நகரத்தார் இல்லங்களின் வெளிப்புறங்களைச் சுதைச் சிற்பங்கள் அலங்கரிக்கும்.

சுருங்கக் கூறினால் தமிழகத்தில் தொன்றுதொட்டு வந்த கட்டடக்கலையும் சிற்பக்கலையும் அழிந்து போகாமல் நகரத்தார் காத்தனர் என்பது வரலாற்று உண்மையாகும்.

**ஓவியக்கலை**

தாங்கள் திருப்பணி செய்த கோயில் மண்டபங்களின் விதானங்களிலும், கோயில் திருச்சுற்றுக்களிலும் பலவித வண்ண ஓவியங்களை நாயக்கர் பாணியில் வரைந்துள்ளதைக் காணலாம். மகாபாரத, இராமாயணக் காட்சிகளும் திருவிளையாடற்புராண நிகழ்ச்சிகளும் ஓவியங்களாகத் தீட்டப்பட்டுள்ளன. இலுப்பைக்குடிக்கோயில் போன்ற இடங்களில் நகரத்தாரின் ஓவியப் பாணியைக்[2] கண்டுகளிக்கலாம். நகரத்தார் தங்கள் வீடுகளில் வளைவு, முகப்பு, கதவு, ஜன்னல் ஆகியவற்றின் மேற்பகுதியில் வண்ண ஓவியங்களை வரைந்துள்ளனர்.

**இசைக்கலை**

நகரத்தார் தமிழிசைக்குச் செய்த தொண்டு பெரியது. தமிழகத்தில் விஜயநகரர், நாயக்கர் ஆட்சி நிலவியபோது தமிழகத்தில் இசைத்துறையில் தெலுங்கும் வடமொழியுமே ஆட்சி செய்தன நமக்குத் தெரியாத மொழியில் இசையை அனுபவிப்பது மனைவியிடம் வகீல் வைத்துப் பேசுவதற்குச் சமமாகும் என்பர் கவியரசர் தாகூர். தமிழகத்தைப் பொறுத்தவரை இந்நிலைதான் இருந்தது. தமிழிசைக்கு மதிப்பில்லாமல் இருந்தது. இந்நிலையை மாற்றத் தமிழிசை இயக்கத்தை உருவாக்கினார் அண்ணாமலை அரசர். இதற்கு எதிர்ப்புக் கிளம்பியது. எதிர்ப்புகளைத் திறமையாகச் சமாளித்த அரசர், தமிழிசைச் சங்கங்கள் ஏற்படுத்தித் தமிழிசை விழாக்கள் நடத்தினார். தமிழிசையை வளர்ப்பதற்கு அண்ணாமலை

நகரில் இசைக்கல்லூரியையும் நிறுவினார். அவர் தமிழிசைக்கு இட்ட வித்து இன்று நல்ல பலனைக் தந்து நிற்கிறது நகரத்தார் தாங்கள் திருப்பணி செய்த கோயில்களையொட்டித் தேவார, திருவாசகப் பாடசாலைகளை ஆங்காங்கே நிறுவிப் பன்னிரு திருமுறைகளை இசையோடு பாட மாணவர்களுக்குப் பயிற்சி அளித்தனர். வேதபாடசாலைகள், கோசாலைகள் ஆகியவற்றையும் அமைத்தனர் நகரத்தார் அமைத்த ஊரணிகள் கலை அழகுடன் இன்றும் பல ஊர்களை அழகுபடுத்திக் கொண்டுள்ளன.

---

1. மா. சந்திரமூர்த்தி, இரணியூர்க் கோயில், பக். 163-164, 1990
2. மா. சந்திரமூர்த்தி, இலுப்பைக்குடி கோயில், பக். 67-86, 1988



# அதிஷ்டானம்: கட்டுமான வடிவமைப்பு

## பல்லவர் கலைப்பாணி - ஓர் ஆய்வு

**வே. இராமன்**

சிறப்பு நிலை ஸ்தபதி, திருச்சி-1

### தென்னகக் கோயில்களின் அதிஷ்டானம்

பண்டைக்காலத் தென்னகக் கோயில்கள் சிற்பநூல் மரபுப் படியே அமைக்கப்பட்டன என்பதனை உத்திரமேரூர்க் கல்வெட்டுகள் உணர்த்துகின்றன. பொதுவாகக் தென்னகக் கோயில்கள் அதிஷ்டானம், பாதம், பிரஸ்தரம், கண்டம், சிகரம், ஸ்தூபி என்ற ஆறு அடிப்படையான, ஆதாரமான அங்கங்களைப் பெற்றமைந்திருப்பதையே காணமுடிகின்றது. கோயில்கள் எந்த அளவுகளில் அமைக்கப்பெற்றாலும் இவ்வங்கங்கள் யாவும் முறை யான அளவுகளைக் கொண்டே எழுப்பப்பெறும் எனலாம். கோயிலமைப்பில் அடித்தளப் பீடமாக அமையும் அங்கத்தை அதிஷ்டானம் என்பர். காசியபம், மயமதம், மானசாரம் போன்ற சிற்பநூல்கள் பல்வேறு அதிஷ்டான அமைப்புகளையும், அவ்வதிஷ்டானத்தில் இடம்பெறும் உறுப்புக்களையும் அவ்வுறுப்புக் களின் அளவுமுறைகளையும் வரையறுத்துக் கூறுகின்றன. இருப்பினும் பண்டைக்காலக் கோயில்களில் ஒரு சில அதிஷ்டான அமைப்புக்களே இடம் பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது.

இவ்வதிஷ்டான அமைப்புக்களிலிருந்து மாறுபட்ட புதிய வடிவமைப்புக் கொண்ட, மேற்கண்ட சிற்பநூல்களில் கூறப்படாத அதிஷ்டானக் கட்டமைப்பைத் திருச்சி மாவட்டம், புள்ளம்பாடி-திருமழபாடி சாலையில் ஆலம்பாக்கம் எனும் வரலாற்று சிறப்பு மிக்க சிற்றூரில் தந்திவர்மன் என்னும் பல்லவமன்னனால் எடுப்பிக்கப்பட்ட கைலாசநாதர் கோயில் கருவறையமைப்பில் காணமுடிகின்றது. இதுபோன்ற அதிஷ்டான அமைப்பு முறை யினைப் பல்லவர் மற்றும் சோழர்காலக் கோயில்களில் காண இயலவில்லை. ஏன் இவ்வதிஷ்டான அமைப்புப் பின்பற்றப்பட வில்லை என்பதனை - சிற்பநூல் கூறும் அதிஷ்டான அமைப்பு

முறையோடு, இக்கோயில் அதிஷ்டான அமைப்பு முறையை ஒப்புநோக்குவதாய் இக்கட்டுரை அமைகிறது.

## கல்வெட்டுகளில் அதிஷ்டானம்

தமிழகத்தின் தொன்மையான தமிழி கல்வெட்டுகள் சில வற்றில் (கருவூர், சித்தன்னவாசல்) அதிட்டானம் என்ற சொல் இடம்பெறுகின்றது. இவை காணப்படும் இடங்கள் சமணத் துறவியருக்கென அமைக்கப்பட்ட 'கற்படுக்கை'களாக இருப்பதால் ஒரு 'கல்மேடை' 'கல்தளம்' என்ற பொருளை அதிஷ்டானம் குறித்து நின்றது எனலாம்.

## அதிஷ்டானத்தைக் குறிக்கும் பிற சொற்கள்

சிற்பநூல்கள் அதிஷ்டானத்தை பூமி, தரணி, புவனம் ஆதாரம், தலம், வஸ்து, பிருதிவி, ஆதியங்கம் எனப் பலவகை யாகக் குறிப்பிடுகின்றன. கருவறையில் அமைக்கப் பெறும் திருமேனியின் இருக்கையிடமாகவே அதிஷ்டானத்தின் அமைப்பு பொருந்தியிருப்பதால் இதனை 'இருக்கை திட்டமைப்பு' 'கருவறைக் கட்டுமான அடிப்படை நிறுவகம்'' 'தாங்குதளம்' எனப் பொருள் கொள்வாரும் உண்டு.

## அதிஷ்டானம் அமைவிடங்கள்

அதிஷ்டான உறுப்புக்களை-அமையப்பெறும் இடத்திற்கேற்ப கூட்டியும், குறைத்தும் அமைப்பதைக் கோயில் கட்டட அமைப்பில் பரவலாகக் காணமுடிகின்றது. கருவறை அமைப்பில் எழிலோடு அமைப்பது ஒருவகை; கோபுர அமைப்பில் அதன் உன்னத தோற்றத்தை எழில்கூட்ட, கலையுணர்வுத் தோற்றமாக அமைத்தல் பிறிதொருவகை; எழில்மிகு மண்டபங்களில் எடுப்பிப்பது ஒரு வகை; உண்ணாழியில் இறையுணர்வோடு ஆவுடையாராக இடம் பெறச் செய்வது பிறிதொரு வகை என்றும், நந்திமண்டபம் மற்றும் பலீபீடம் அமைப்பில் அமைப்பது ஒரு வகை என்றும் அதிஷ்டான அமைப்பைப் பலவகைப்படுத்தலாம்.

## அதிஷ்டான அமைப்பும், கணக்கீடு விதிமுறைகளும்

அதிஷ்டானமானது கருவறையில் இடம்பெறும் பாதச் சுவருக்குக் கீழும் நிலமட்டத்திற்கு மேலும் அமையும் ஒரு கட்டு

மானப் பகுதியாகும். பல்லவர் காலக் குடைவரைக் கோயில் மற்றும் ஒற்றைக் கற்கோயில்களில் இவ்வதிஷ்டான அமைப்பு எப்படி அமைந்தாலும் ஏற்படும் பளுவினால் கட்டடம் பாதிக்க வாய்ப்பு இல்லை. ஆனால் பல உறுப்புக்களை இணைத்து எழுப்பப்படும் கட்டுமானக் கோயில்களில் அதிஷ்டான அமைப் பானது தம்மேல் எழுப்பப்படும் கட்டடம் முழுவதையும் தாங்கும் திறன் கொண்டதாக அமைத்திடல் வேண்டும் கோயில் எடுப்பிக்கப்படும் காலத்தே கட்டடத்தின் நீளம், அகலம் மற்றும் உயர அளவுகளை நிர்ணயம் செய்யும்போது அக்கட்டட அதிஷ்டானத்தின் மேல்வரும் பாதச்சுவர், கூரைச்சுவர் மற்றும் மேல்தளங்களின் பளு முதலானவற்றைக் கணக்கீடு செய்து அதிஷ்டானத்தின் உயரத்தை நிர்ணயம் செய்வர். கட்டுமானக் கோயில் அமைப்பானது சிற்பக்கலைஞனின் ஆக்கத்திறன், சிந்தனை, அனுபவம் முதலானவற்றின் அடிப்படையில் எழுவதாகும். இதில் தொழில் நுணுக்கம், அறிவியல் மற்றும் தத்துவங்களும் அடங்கும் எனலாம்.

நம் முன்னோர்களால் எடுப்பிக்கப்பட்ட கட்டுமானங்களைக் கணித்து அளந்து அவற்றிற்கெல்லாம் இலக்கணம் கண்டனர் முன்னோர். அவ்விலக்கணங்களிலே சில வேறுபாடுகள் இருப்பினும் மாறுபாடுகள் ஏதுமில்லை. இவ்வாறு தலைமுறை தலைமுறையாகப் பெற்றிட்ட அனுபவங்களை ஒன்று திரட்டி இலக்கணமாகச், சிற்ப நூல்களாக நமக்குத் தந்துள்ளனர் சிற்பநூலோர். இந்நூல்களின் துணைகொண்டு எழுப்பப்படும் கோயிலின் உயரத்திற்கேற்ப அதிஷ்டான உயரத்தை நிர்ணயம் செய்திடுவர். அவ்வதிஷ்டான அங்கங்களின் உயரம் மற்றும் நீட்சி அளவீடுகளை அந்நூல்கள் வரையறுத்துக் கூறுகின்றன. இங்ஙனம் உயரளவைக்கொண்டு கணக்கீடு செய்யும் அமைப்பை சாந்திகம், பௌஷ்டிகம், ஐயதயம், அத்புதம், சார்வகாமிகம் என வகைப்படுத்தியுள்ளனர். இவைகள் மூலம் சிற்பக் கலைஞனின் செயலாக்கத்திறனுக்கேற்ப அதிஷ்டானக் கட்டுமானங்களின் உயரளவை மிகத்தெளிவாக நிர்ணயம் செய் திடுவர் எனலாம். மேலும் இவ்வதிஷ்டான உயரமானது பாதச் சுவரின் உயரளவில் ஆறில் ஒரு பங்கு, ஏழில் ஒரு பங்கு, எட்டில் ஒரு பங்கு குறைத்தோ, பாதச்சுவரின் உயரளவில் பாதியோ தேவையை அனுசரித்து உயரம் கொள்வர். இக்கட்டுமானம்

இடத்திற்கேற்பவும், பொருளுக்கேற்பவும் வேறுபடும் என்பது பொது விதி.

### அதிஷ்டான பேதங்கள்

சிற்பநூல்கள் அதிஷ்டானங்களை இருவகைப்படுத்திக் கூறுகின்றன. அவை முறையே 'பாதபந்தம்' 'பிரதிபந்தம்' எனப் பெயர் பெறும். சிற்பநூல்களில் கூறப்படும் அதிஷ்டானங்கள் யாவும் இப்பெரும் பிரிவுகளுக்குள்ளேதான் அடங்கும் எனலாம். சிற்ப நூல்களில் கூறப்படும் அதிஷ்டான அங்கங்களையும், அவற்றில் இடம்பெறும் சிற்றுறுப்புக்களையும் ஆராய்ந்து பார்க்கும்போது உபானம், ஜகதி, குமுதம், கண்டம், மற்றும் பட்டிகை என்ற அங்கங்களைக், கொண்ட ஒருவகை அமைப்பையும்; உபானம், மகாபத்மம், குமுதம், பட்டிகை அல்லது யாளி என்ற அங்கங்களோடு கூடிய ஒருவகை அதிஷ்டான அமைப்பையும் எடுத்துக்கூறுவதாக அமைந்துள்ளது எனலாம்.

### பாத பந்தம்

உபானம், ஜகதி, குமுதம், கம்பு, கண்டம், கம்பு, மகா பட்டிகை, கம்பு ஆகிய எட்டு உறுப்புக்களை உள்ளடக்கிய அமைப்பைப் 'பாதபந்தம்' எனக் கூறுவர். இவ்வாறமைந்த அதாவது எட்டு உறுப்புக்களைக் கொண்ட அதிஷ்டானமே மாமல்லபுரம் முகுந்த நாயனார் கோயில், திருப்பத்தூர் கைலாசநாதர் கோயில் மற்றும் உத்திரமேரூர் சுந்தரவரதப் பெருமாள் கோயில் ஆகிய கோயில்களின் கருவறையமைப்பின் கட்டுமானங்களில் இடம் பெற்றுள்ளன என்பது குறிப்பிடத்தக்கதாகும்.

இவ்வளவில் கூறப்பட்டவை அதிஷ்டான அமைவிடம், அமைப்பு, கணக்கீடு, பிரிவு, உறுப்பு இவைகளின் ஒரு சில விளக்கங்கள் அதிஷ்டான அமைப்பினை அறிதற்குச் சுட்டிக் காட்டப்பட்டவையாகும். இனி தந்திவர்மன் கலைப்பாணியில் அமைந்துள்ள அதிஷ்டானத்தோடு ஒப்புநோக்குவோம்.

### தந்திவர்மன் கலைப்பாணி

ஆலம்பாக்கம் ஸ்ரீ கைலாசநாதர் கோயிலின் கருவறை புறச் சுவரில் இடம்பெற்றுள்ள இவ்வதிஷ்டானம் 'பாதபந்தம்' வகையைச்

சார்ந்ததாகும். இவ்வதிஷ்டானத்தில் அடங்கிய உறுப்புக்கள் முறையே கீழிருந்து உபானம், ஜகதி, குமுதம், கம்பு, பிரதிகம்பு, கண்டம். கம்பு, மகாப்பட்டிகை, மேல்கம்பு என்ற ஒன்பது உறுப்புக்களைக் கொண்ட புதுமையான, புதிய கட்டுமானமாக வடிவமைக்கப்பட்டுள்ளது.

பொதுவாக முன்பு சொன்ன பாதபந்த அதிஷ்டானம் இடம் பெற்றுள்ள கோயில்களில் குமுதத்தின் மேல் கம்பு, கண்டம் என இடம்பெற்றுள்ளதைக் காணமுடிகின்றது. ஆனால் இங்கு இடம் பெற்றுள்ளன. அதாவது பிரதிகம்பு என்ற சிற்றுறுப்பு கூடுதலாக இடம் பெற்றுள்ளது. இவ்வகை அதிஷ்டானக் கட்டமைப்பைப் பற்றிக் காசியபம், மானசாரம் மற்றும் மயமதம் போன்ற சிற்ப நூல்களில் குறிப்புகள் ஏதுமில்லை. பல்லவர் மற்றும் சோழர் காலக் கோயில்களிலும் இக்கட்டுமானம் காணப்பெறவில்லை எனலாம்.

இத்திருக்கோயிலை எடுப்பித்த சிற்பக்கலைஞன் எந்தச் சிற்ப நூலைப் பின்பற்றிப் படைத்தான் என்பது ஆய்வுக்குரியது. எனவே சிற்ப. கட்டட இலக்கணத்திற்கு இக்கட்டமைப்பு ஒரு சிறந்த எடுத்துக்காட்டாக அமைந்துள்ளதெனலாம். ஆனால் பழமையான இவ்வதிஷ்டானக் கட்டமைப்பை ஏன் பின்பற்றவில்லை? என்பது சிந்திக்கத்தக்கது.

**படைப்புக்கலை**

அதிஷ்டானக் கட்டுமான அமைப்பானது பல சிற்றுறுப்புக் களைக் கொண்டு அமையப்பெறுவதாகும். இவ்வுறுப்புக்கள் யாவும் அவற்றின் மேல் இடம்பெறும் பிற அங்கங்களின் சுமையைத் தாங்கும்படி வடிவம் கொடுக்கப்படுகின்றன. மேலும் விரிசல் அடையாமலும், சுமையினால் சரியாமலும் நிலத்தில் அமியாமலும் கணக்கீடு செய்து வடிவமைப்பர். படைப்புக்கலையில் தாங்கு தளமாக அமைந்துள்ள இக்கோயில் அதிஷ்டான அமைப்பை நுணுகி ஆராய்ந்தால் இடம்பெறும் ஜகதியின் உயர அளவிற்கேற்பக் குமுத அமைப்பு வலிமையான கட்டுக்கோப்புடன் அமையப் பெறவில்லை என்பதும், மஹாபட்டிகை கூடுதலான வலிமை பெற்றுச் சீரான கட்டமைப்பைப் பெறவில்லை என்பதனையும் அறியமுடிகின்றது. இக்கட்டமைப்பைச் சிற்பநூலில் கூறப்பட்டுள்ள கட்டமைப்போடு ஒப்புநோக்கின் எளிதில் உணரலாம்.

## முடிவு

அதிஷ்டானக் கட்டுமானம் வலிமையான கட்டுக்கோப்புடன் அமையப்பெறுவதாகும் எனக் கண்டோம். எனவே இக்கட்டமைப்பு சீராக அமையவில்லையென்றால், நாளடைவில் நலிவுற்று அழிவுற வாய்ப்பாகும். இவ்விதிக்கேற்ப இக்கோயில் அதிஷ்டானச் கட்டமைப்பு கணிப்புடன் எடுத்தாளப்படவில்லையாதலால் இவ்வதிஷ்டான அமைப்பைப் பிறகோயில் கட்டமைப்பில் இடம் பெறச் செய்யவில்லையோ எனவும் ஐயுற வாய்ப்புள்ளது. இருப்பினும் இவ்வமைதி கலைப்பாணியைக் கொண்ட கோயில் இன்றளவும் நல்ல நிலையில் உள்ளதை நோக்கின் தொடர்ந்து ஏன் பின்பற்றபடவில்லை என்று சிந்தித்தால் சிற்பநூல் மரபுப்படியே அமையப்பெறும் அதிஷ்டான அமைப்பு அதற்குண்டான நீட்சி, அடக்கம், ஒடுக்கம் முதலானவை முறையான அளவினைப் பெற வேண்டும். அங்ஙனம் வடிவமைக்கப்படாத காரணத்தாலேயே, வலிமையுடன் இருந்த போதிலும் அதன்பின் வந்த சிற்பக் கலைஞர்கள், தம் கட்டுமானங்களில் இவ்வதிஷ்டான அமைப்பை இடம்பெற செய்திடாமல் சிற்பநூல் மரபினையே பின்பற்றினர் என உறுதியாக நம்பமுடிகிறது.

## குறிப்பு

இவ்வரலாற்றுச் சின்னம் தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையினரால் பாதுகாக்கப்பட்டு வருகிறது.

## பயன்பட்ட நூல்கள்

1. மயமதம், காஸ்யபம் - சிற்ப நூல்கள்
தஞ்சை சரசுவதிமகால் நூலக வெளியீடுகள்.



# A 14th CENTURY - VIJAYANAGAR BRONZE FROM PADI

**M. Chandramoorthy**
Registering Officer, Madras.

Padi, a small village situated in the Saidapet Taluk of Chenglepet MGR District is about 13 k.m. north west of Madras. The Epigraphs of this place refer this village as Tiruvalithayam in Ambatturnadu which was a sub-division of Jayangonda Chola valanadu in Puliyurkkottam.

An ancient Siva temple is located in the heart of this village. The presiding deity of this temple is called as Tiruvalithaya nayanar. It appears that this name been corrupted into Tiruvalliswarar in modern times. This temple was sung by saint Tirugnanasambandar in seventh century A.D. and later by Arunagirinathar and Ramalinga swamikal.

Fourteen inscriptions have been copied from this temple The inscriptions refer to the presiding deity as Tiruvali-haya nayanar and its consort as Tiruvithi nachiyar. During Chola period this place had attained an exalted status n the religious and art history.

A bronze image of a seated Kali probably assignable o 14th century A.D. was noticed by the present author n the Pidari Ponni Amman temple, Padi, recently. This temple is located about 50 yards towards north-east of the above mentioned Siva temple.

The image Kali which is under discussion is the Utsva-murthi of this temple.

It is seated on a padma pita with the left leg placed on the asana pedestal) and the right leg is hanging down Among the four hands, the rear upper right hand bears the Trisula (Trident) and the left one holds the pasa (noose). The lower right hand exhibits the Abhaya mudra and the left one holds the Kapala (skull).

The flaming jwala makuta adorns the head. A skull is also seen prominently on the head. A pair of entwined serpents upon the skull is an added attraction. On the right side is shown a dancing serpent and on the left is the crescent moon.

The right ear is beautified by the preta kundala and the left the Patra kundala. The sacred thread on the chest, a pearl necklace on the neck, the twin serpents encompassing the breasts are the other ornamentations that adorn the image.

The pronounced eye brows, enlarged eyes, well chiselled nose, the protruding teeth at the mouth and the graceful front and back anatomical features are well carved by the sculptor.

The total height of this bronze (including the pedestal) is 48.5 c.m. and width (in between the shoulders) is 12 c m.
The stylistic presentation of the idol clearly represent the artistic tradition of 14th century A.D.

The idol is presently preserved in the Tiruvalliswarar temple, Padi (See cover page for the picture)

# இரங்கல்

## முனைவர் சி. ஆர். சீனிவாசன்

அறிஞர் சி. ஆர். சீனிவாசன் அவர்கள் 8-9-1934-ல் பிறந்தார். 1959-ஆம் ஆண்டு சென்னைப் பல்கலைக் கழகத்தில் முதுகலைப் பட்டம் பெற்றார். உடன் இந்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறையில் முதன்மைக் கல்வெட்டாய்வாளர் அலுவலகத்தில் சேர்ந்து சிறக்கப் பணியாற்றி வந்தார். இவர் திராவிட மொழிக் கல்வெட்டுகளில் ஆழ்ந்த அனுபவமும் பயிற்சியும் மிக்கவர். 1977-ஆம் ஆண்டு கருநாடகப் பல்கலைக் கழகத்தில் 'தென்னிந்திய வரலாற்றில் காஞ்சிபுரத்தின் தொடர்பு' (Kanchipuram in Relation to South Indian History) என்ற தலைப்பில் ஆய்வுசெய்து முனைவர் பட்டம் பெற்றார். இந்திய நாளிதழ்களிலும், அயல் நாட்டு நாளிதழ்களிலும், ஆய்வு இதழ்களிலும் கல்வெட்டு, வரலாறு, கலைத் தொடர்பான கட்டுரைகள் எழுதியுள்ளார்.

இவர் தொகுத்த 300-க்கும் மேற்பட்ட திராவிட மொழிக் கல்வெட்டுகளை இந்தியத் தொல்பொருள் ஆய்வுத்துறை தென்னிந்தியக் கல்வெட்டுகள் என்ற வரிசையில் வெளியிட்டுள்ளது. தஞ்சைத் தமிழ்ப் பல்கலைக் கழகத்தில் கல்வெட்டியல் துறையில் தலைவராகப் பொறுப்பேற்றுச் சில காலம் இவர் பணியாற்றியுள்ளார். கடந்த ஏப்ரல் 16-ஆம் தேதி அன்று காலமானார். இவர் இயற்கையெய்தியதனால் ஏற்பட்ட இழப்பு தென்னிந்திய வரலாற்று உலகில் ஈடு செய்ய முடியாததோர் இழப்பாகும்.

---

தமிழ்நாடு அரசு தொல்பொருள் ஆய்வுத்துறையின் அச்சகத்தில் அச்சிட்டு
இத்துறை இயக்குநருக்காக திரு மா. சந்திரமூர்த்தி
பதிவு அலுவலரால் வெளியிடப்பெற்றது.